# குடும்பத்தினர் அனைவரும் திட ஆரோக்கியத்துடன் திகழ

# ஃபாஸ்ஃபோமின்

உங்கள் குடும்பத்தினர் அனைவரும் வலிவும் ஆரோக்கியமும் பெற்றுத் தெம்புடன் திகழ வைட்டமின் 'பி' காம்ப்ளெக்ஸ் மற்றும் பலவகை கிளிஸரோ ஃபாஸ்பேட்கள் கலந்துள்ளது.

ஃபாஸ்ஃபோமின் அருந்தி வந்தால் களைப்பும் சோர்வும் உங்களை அணுகாது. களைப்பை நீக்கும். பசியைத் தூண்டும். வலிவை பெருக்கும். நோய்களை எதிர்க்கும் சக்தியை அளிக்கும். குடும்பத்தினர் அனைவரும் ஆரோக்கியமயமாய் வாழ உதவுவது பழரஸ மணம் கமழும் பச்சை நிற வைட்டமின் டானிக் ஃபாஸ்ஃபோமின்.




SQUIBB A century of experience builds faith

# கல்கி



## பொருளடக்கம்

குரோதி மாசி 24 ● ● ● ● ● மார்ச் 7



● "கல்கி"யில் வெளியாகும் கதைகளில்
● உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப்
● பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




அன்னிய மொழியைக் கேட்கமாட்டேன்
அன்னிய மொழியைப் பேசமாட்டேன்
அன்னிய மொழியைப் பார்க்கமாட்டேன்
அன்னிய உதவி

இந்தி
மத்திய சர்க்கார்
ஆங்கிலம்
PK



# பத்திரிகைக் காகிதப் பஞ்சம்

மலர் 24 ● இதழ் 32

உயிர் வாழ்வதற்கு உணவு எப்படியோ அப்படிப் பத்திரிகைகள் வாழ்வதற்குப் பத்திரிகைக் காகிதம். சில நாட்களுக்கு முன் மக்களுக்கு உணவுப் பஞ்சம் உண்டாக்கப்பட்டது. பத்திரிகைக் காகிதத்துக்கும் சிறிது காலமாகவே பஞ்சம் நீடித்து வருகிறது; நாளுக்கு நாள் கடுமையாகி வருகிறது. இன்னும் இதைச் சமாளித்தபாடில்லை. சமாளிப்பதற்கான முயற்சி எடுக்கக்கூட அரசாங்கம் தயாராக இல்லை.

மக்களிடையே ஆண்டுதோறும் கல்வி வளர்ந்து வருகிறது. ஆனால் பத்திரிகைகள் இதைப் பூர்த்தி செய்யும் அளவுக்கு வளர விடப்படவில்லை. காகிதப் பற்றுக்குறைதான் காரணம்.

பத்திரிகைகள் வெளியிடக்கூடிய பக்கங்கள் 1957ம் ஆண்டில் என்ன இருந்ததோ அதே அளவுக்கு இப்போதும் அடக்கப்பட்டிருக்கின்றன. பத்திரிகைக் காகிதக் கோட்டாவும் 1959ம் ஆண்டு எவ்வளவு தேவைப்பட்டதோ அதே அளவில்தான் இன்றைக்கும் கட்டுப்படுத்தப் பட்டிருக்கிறது. பத்திரிகைகளின் சேவையை விரிவாக்கவும் மக்களுக்கு அரசியல் அறிவைப் பெருக்கவும் பத்திரிகைத் தொழில் நடத்துவோருக்கு ஆசைதான். ஆனால் பெர்மிட்—லைசென்ஸ் ராஜ்யத்தில் செயல் புரிய வேண்டிய துரதிர்ஷ்டமான நிலைமையில் இந்தியப் பத்திரிகைகள் இருப்பதால் காகிதத்துக்காக அரசாங்கத்தின் தயவைப் பத்திரிகைகள் எதிர்பார்த்தே தொழில்பட வேண்டியிருக்கிறது.

அரசாங்கத்துக்கு அந்நியச் செலாவணி நெருக்கடி. பத்திரிகைக் காகிதத்தை அயல் நாட்டிலிருந்து தான் பெருவாரியாக இறக்குமதி செய்ய வேண்டி யிருக்கிறது. நமக்கு லட்சம் டன் ஆண்டுதோறும் தேவைப்படுகிறது. மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களுக்குப் பின்னரும் உள்நாட்டு உற்பத்தி இந்த இலக்கை எட்டினபாடில்லை. நேபா தொழிற்சாலையிலிருந்து நமது தேவையில் மூன்றில் ஒரு பாகம்தான் கிடைக்கிறது. கட்டாயமாக இதை உபயோகப்படுத்தியே ஆகவேண்டும் என்பது சர்க்கார் கட்டளை. இங்கே உற்பத்தி செய்யப்படும் காகிதம் பழுப்பு நிறமாக இருக்கலாம். யந்திரத்தில் பூட்டிச் சுழற்றினால் அடிக்கடி துண்டித்துப் போகலாம். அதைப்பற்றி அரசாங்கம் கவலை கொள்ளுவதில்லை. தரம்தான் இப்படி இருக்கிறதே, விலையாவது சரஸமாக இருக்கக்கூடாதா? இறக்குமதி விலையைவிட ஒன்றரை மடங்கு கூடுதல் விலை. இப்போது ஸ்ரீ டி. டி. கே.யின் கைங்கரியமும் சேர்ந்திருக்கிறது. இறக்குமதியாகும் பல பொருள்களுக்கு உபரி சுங்கமாக விதிக்கப்பட்டுள்ள பத்து சத வரி பத்திரிகைக் காகிதத்துக்கும் அமுலாகிறது. இதனால் பத்திரிகைக் காகித விலை கூடுதலாகும். ஆனாலும் உள்நாட்டுக் காகிதத்தைவிட விலை குறைவுதான். வேறு வழியில்லாது நேபா காகிதத்தைக் கொண்டு நடத்தப்படும் பத்திரிகைகளின் தோற்றத்தைப் பற்றி வாசகர்கள் அறிவார்கள். உலகத்தில் உலவும் பத்திரிகைகளுக்குள் நேபா காகிதம் உபயோகிக்கும் இந்தியப் பத்திரிகைகளைப் போல் பார்ப்பதற்கு அருவருப்பாக இருக்கும் வேறு பத்திரிகை கிடையாது என்ற 'புகழ்' நமக்குக் கிடைத்து வருகிறது.

முன்னேற்றமடையாத நாடுகளில் எல்லாம் கூட அந்நியச் செலாவணித் தட்டுப்பாடு இருக்கத்தான்



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி — பாப்பா
— பாரதியார்

செய்கிறது. அதனால் பத்திரிகை வளர்ச்சி நடைப்படவில்லை. பர்மா, இந்தோனேஷியா போன்ற நாடுகளில் பத்திரிகைக் காகிதத்தின் உபயோகம் கடந்த 10, 12 ஆண்டுகளில் இரு மடங்கு, மும்மடங்காகப் பெருகியுள்ளது. சிறியநாடுகள் என்றாலும் பத்திரிகைகள் செய்து வரும் நற்பணியை அந்நாட்டுச் சர்க்கார்கள் நன்றாகவே உணர்ந்து அவற்றை ஊக்குகின்றன. ஆனால் நமது நாட்டில் மட்டும் பத்திரிகைகள் நலமும் வளர்ச்சியும் அரசாங்கத்தினரால் புறக்கணிக்கப்படுகின்றன. இது போல இதர ஜனநாயக நாடுகளில் காண்பது அரிது.

பத்திரிகைக் காகித உற்பத்திக்காகப் பல ஆலைகள் அனுமதிக்கப்பட்டிருக்கின்றன என்பது உண்மையே. ஆனாலும் அவற்றிலிருந்து போதிய அளவு காகிதம் கிடைக்கும் வரையிலாவது இறக்குமதியை அதிகரிக்கக் கூடாதா என்றுதான் பத்திரிகையாளர்கள் அங்கலாய்க்கிறார்கள்.

நேபா மில் பூர்த்தி செய்யாத குறையை இறக்குமதி செய்து பூர்த்தி செய்து வருகிறோம். இதற்காகப் பிடிக்கும் செலவு ரூ. 6½ கோடி. அதாவது ஒரு வருஷத்தில் மொத்தம் இறக்குமதி செய்யப்படும் ரூ. 1400 கோடி மதிப்புள்ள பொருள்களில் பத்திரிகைக் காகித இறக்குமதிக்காகச் செலவாவது இரு நூறில் ஒரு பங்குதான். இதில் சென்ற ஐந்து ஆண்டுகளில் குறிப்பிடப்படும்படி அதிக வித்தியாசம் இல்லை. மற்றப் பொருள்களில் இறக்குமதி அதிகமானாலும், அவற்றுக்காக அந்நியச் செலாவணி அதிகம் செலவானாலும் சர்க்கார் அனுமதிக்கிறது. ஆனால் பத்திரிகைக் காகித விஷயத்தில்மட்டும் மிகவும் கண்டிப்புக் காட்டுகிறது. அதிகமாக இறக்குமதி செய்ய அனுமதிப்பதே யில்லை. மக்களிடம் அரசியல் அறிவு அதிகமாகப் பெருகுவதில் ஒருகால் உள்ளூறப் பயமோ என்றுகூடத் தோன்றுகிறது. அரசாங்கத்தின் அந்நியச் செலாவணி நெருக்கடி எப்போதுதான் தீரப் போகிறது? திட்டங்கள் வகுத்து நாடுதோறும் கடன் வாங்கத் தொடங்கிய நாள் முதல் இன்று வரையில் இதே பஞ்சப் பாட்டைத்தான் பாடிக் கொண்டிருக்கிறார்கள். இன்னும் பல ஆண்டுகளுக்கு இது தீரப் போவதும் இல்லை.

இந்த நிலையில் அந்நியச் செலாவணி நெருக்கடி ஏதோ தற்காலிகமாகத் தோன்றியது போலவும், இதைச் சீக்கிரமே சமாளித்துப் பத்திரிகைக் காகிதம் வேண்டிய மட்டும் கிடைக்கச் செய்ய முடியுமென்பது போலவும் அரசாங்கத்தினர் பேசுகிறார்கள். அவசியமானால் சாதாரண காகிதத்தை ரீம் கணக்கில் ஒன்றுக்கு இரண்டாக விலை கொடுத்துக் கடைகளிலிருந்து வாங்கிப் பத்திரிகை நடத்தலாமே என்று வாய் கூசாமல் செய்தித் துறை அமைச்சர் ஸ்ரீமதி இந்திரா காந்தி சொல்கிறார். இதைக் கேட்டால், பத்திரிகை இலாகாவைப் பரிபாலிக்கும் பொறுப்பு அநுதாப உணர்ச்சியில்லாத இத்தகைய ஒருவரிடம் விடப்பட்டதே என்று வருந்தவே தோன்றுகிறது. புத்தகத்துக்கு உபயோகப்படும் காகிதத்தை வாங்கிப் பத்திரிகை நடத்திக் கட்டுப்படியாகுமா? இந்த அதிசயத்தை இந்திய சர்க்காரிடம்தான் பத்திரிகையாளர்கள் தெரிந்துகொள்ள வேண்டும்.

இறக்குமதி இல்லாததாலும் நேபா தொழிற்சாலை குறித்த காலத்தில் அனுப்ப வேண்டிய காகிதத்தை அனுப்பாததாலும் பத்திரிகைகளின் கைவசமுள்ள காகிதம் வேகமாகத் தீர்ந்து கொண்டு வருகிறது. விரைவிலேயே பத்திரிகைகளை மூடிவிட வேண்டிய நிலையும் வரலாம் என்று பத்திரிகை நடத்துபவர்கள் பயப்படுகிறார்கள்.

இந்தப் பரந்த பாரத நாட்டில் ஏதோ கொஞ்ச நஞ்சம் ஜனநாயகம் எஞ்சியிருப்பதற்குப் பத்திரிகைகள்தான் காரணம். எனவே, பத்திரிகைத் தொழிலுக்கு ஏற்படும் ஆபத்து ஜனநாயகத்துக்கே ஆபத்தாகும்; கருத்துச் சுதந்திரத்துக்கே ஆபத்தாகும். உடனடியாக நிலைமையைச் சமாளிக்கச் சர்க்கார் நடவடிக்கை எடுக்க வேண்டியது அவசியம். உணவுப் பண்டத்துக்கு அடுத்தபடியாகப் பத்திரிகைக் காகிதத்துக்கு முக்கியத்துவம் அளித்து இறக்குமதி செய்யப்படும் அளவை உடனே அதிகரிக்க வகை செய்ய வேண்டும். ஆண்டுக்கு இரண்டு கோடி ரூபாய்க்கு இறக்குமதியை உயர்த்தினால் நிலைமை மாறிவிடும். இதைச் சுலபமாகவே செய்ய முடியும். நமது பொருளாதாரத்துக்கு எவ்வித ஹானியும் இதனால் ஏற்பட்டு விடும் என்று தோன்றவில்லை.

இந்தியப் பத்திரிகையாளர் சங்கம் ஒரு நாளைக்குப் பத்திரிகையை மூடிவிட்டு, அதன் மூலம் தங்கள் கண்டனத்தைத் தெரிவிக்க வேண்டுமென்று பத்திரிகைகளை யெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கிறது. அப்படிச் செய்ய வேண்டாமென்று வேண்டுகோள் விடுத்துள்ளார் அமைச்சர் ஸ்ரீமதி இந்திரா காந்தி. அவருடைய வேண்டுகோளுக்குச் செவி சாய்த்து நிலைமையை எழுதித் தீர்த்துப் பத்திரிகையாளர்கள் ஆறுதல் கொள்ளலாம். ஆனால் இது மட்டும் போதுமா? உண்மை நிலைமையை உணர்ந்து அமைச்சர் எப்போது ஆவன செய்யப் போகிறார்?

# எதிர்பார்த்ததுதான்!

புது தில்லியில் நடைபெற்ற முதன் மந்திரிகளின் மகாநாட்டில் என்ன செய்ய முடியும் என்று நாம் எதிர்பார்த்தோமோ, அதற்கு மேலாக எதுவும் நடந்துவிடவில்லை. என்ன நடந்தது என்பதையும் இதுவரை ஆட்சித் தலைவர்கள் திட்டவட்டமாகக் கூறவில்லை. 'திருப்தி; பரம திருப்தி' என்று மட்டும் சொல்லிக் கொள்கிறார்கள். ஹிந்தி வெறியர்களும் தங்கள் சுயரூபத்தை விடாமல் காட்டிக் கொண்டே வருகிறார்கள். ஆட்சி மொழிச் சட்டத்தை ஒருகாலும் மாற்றக்கூடாது என்று பார்லிமெண்ட் அங்கத்தினர் பலர் தீவிரமாயிருக்கிறார்கள். 'ஹிந்தி ஆட்சிமொழியானது முடிந்துபோன காரியம். ஆங்கிலமும் நீடிக்க

வழிவகை செய்வோம். இன்னும் எத்தனையோ கட்டங்களில் ஆலோசனை செய்ய வேண்டும். முடிவு அப்புறமே வெளியாகும்' என்று பிரதமரவர்கள் 'வழ வழ குழகுழ'ப் பேச்சுப் பேசியிருக்கிறார்.

சாஸனத்தின் ஆட்சி மொழிப் பிரிவை ரத்து செய்துவிட்டு ஆங்கிலத்தை மட்டுமே நீடிக்க வேண்டும் என்ற நியாயமான கோரிக்கைக்கு ஆட்சித் தலைவர்கள் சிறிதும் செவி சாய்க்கவில்லை. 'எப்படியும் ஹிந்தி அரியாசனம் ஏறிவிட்டது' என்கிற கருத்தின் மேல் செய்கிற எந்த ஏற்பாடும் சமநீதியைச் சிதைக்கத்தான் செய்யும். இந்தத் திட்டங்களுக்கு நம் இளைஞர்களை ஆட்படுத்துவது அவர்களை எதிர்காலத் தீண்டாதவராகச் செய்வதற்கு ஒப்பாகும்.

மத்திய சர்க்கார் பரீட்சைகளை எல்லா மொழிகளிலும் நடத்தும் திட்டமும், மாடரேஷன் யோசனைகளும் தேச ஐக்கியத்தை நிச்சயமாக நாசப்படுத்திக் குறுகிய பிரதேசப் பித்தை வளர்க்கப் போகிறது.

எல்லாத் துறைகளிலும் அனைவருக்கும் ஒருவிதமான பட்சபாதமுமில்லாமல் வெகு சிறப்பான முறையில் 150 ஆண்டுகளாக உபயோகமாகிவரும் ஆங்கிலத்தை என்றேனும் ஒரு நாள் எப்படியேனும் அகற்றியே தீர வேண்டும் என்கிற எண்ணத்தை அகற்றினாலொழிய நிர்வாகம் நல்ல முறையில் நடைபெறப் போவதில்லை. இருமொழித் திட்டத்தையும், பல மொழிப் பரீட்சையையும் இப்போது நாம் ஏற்றுக் கொண்டாலும் பிறகு அவற்றின் விபரீத விளைவுகள் தெரியும். காரியாலயங்களில் ஒவ்வோர் இலாகாவும் துண்டுபட்டு நிற்கும். வெறுப்புணர்ச்சி ஓங்கும். எல்லையற்ற கால தாமதம் உண்டாகும். ஏராளமான பணம் செலவாகும். அதன் பின் விழித்துக் கொள்வதில் பயனில்லை. திட்டங்களை மீண்டும் மாற்றுவது இயலாமலே போகும். அதனால்தான் தலைக்கு மேல் வெள்ளம் போகு முன்பே, 'இதெல்லாம் வேண்டாம்; தேசம் முழுவதற்கும் ஒரு பொது விதியைப் பின்பற்றுவோம். இதற்குப் புதிதாக எதுவும் செய்ய வேண்டியதில்லை; நடைமுறையை அப்படியே நீடித்தாலே போதும்' என்று திரும்பத் திரும்ப அடித்துக் கூறுகிறோம். உற்பாதங்கள் நிகழு முன் இந்த உண்மை அரசாங்கத்துக்கு உறைக்க வேண்டுமெனில் ஆண்டவன் ஏதேனும் அற்புதம் புரிந்தாலன்றி வேறு வழியில்லை.

# என்ன சேதி?

## பஞ்சத்தின் பிரம்மா

தஞ்சை மாவட்டத்தில் பூதேவியின் இரு கையில் தானியம் கொழித்து அறுவடையாகியும் அதனை வெளியிடங்களுக்கு அனுப்ப முடியாமல் தேங்கிக் கிடக்கும் நிலவரத்தைப் பத்திரிகைகளில் பார்த்தோம். ஹிந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியில் ரயில் போக்குவரத்து தடைப்பட்டதுதான் காரணம் என்று சொல்கிறார்கள். ரயில் போக்குவரத்துச் சீர்ப்பட்ட பின்பும் நிலைமை சீர்திருந்தப் போவதில்லை. ஏனெனில் ரயில் போக்குவரத்துத் தேவைப்படாத சுற்றுப்புற ஊர்களுக்குக் கூட அரிசிப் போக்குவரத்தைக் கட்டுப்படுத்தும் சர்க்கார்தான் அரிசித் தேக்கத்துக்கு முக்கியமான காரணம்.

தமிழக அரசாங்கம் கட்டுப்பாடுகளைத் தற்போது மேலும் இறுக்கியுள்ளது. ஒரு மாவட்டத்திலிருந்து இன்னொரு மாவட்டத்துக்கோ, ஒரே மாவட்டத்தில்கூட குறிப்பிட்ட ஒரு பகுதியிலிருந்து இன்னொன்றுக்கோ, ஒருவர் பத்து லிட்டர் அரிசிக்குமேல், பெர்மிட் இன்றி எடுத்துச் செல்லக் கூடாது என்பது சர்க்கார் உத்தரவு. பெர்மிட் பெறுவது எவ்வளவு கால தாமதத்துக்கும் பண விரயத்துக்கும் இடமளிக்கும் என்பதை அனைவரும் அறிவர். இதுபோன்ற கட்டுப்பாடுகள் சர்க்கார் சிப்பந்திகளின் அதிகாரத்தைப் பெருக்குவதற்கும், இயற்கை அன்னை தயாளமாக அளிக்கும் தானியத்தைக் கள்ள மார்க்கெட்டுக்குத் திருப்பி விடவும்தான் உதவும். பிரம்மாண்டமான முதலீட்டுடன் தொடங்கப்பட்டுள்ள உணவுக் கார்ப்பொரேஷனுக்கு மகத்துவம் உண்டாக்குவதே இந்தத் திட்டங்களின் நோக்கம். உணவுக் கார்ப்பொரேஷன் வாழ வேண்டுமெனில் பஞ்சம் இருந்தேயாக வேண்டும். எனவே பஞ்சத்தைச் சிருஷ்டிக்கும் பிரம்மாவாக அரசாங்கமும் புதுப் புது உத்தரவுகள் பிறப்பித்து வரும்.

## ஆறுதலான தீர்ப்பு

ஒருபுறம் சர்க்காரானது சிப்பந்திகளின் அதிகாரத்தைப் பெருக்கும் திட்டங்களில் இறங்கியுள்ளபோது மறுபுறம் நீதிமன்றத்திலிருந்து ஆறுதலான செய்தியொன்று கிட்டியுள்ளது.

விற்பனைவரி உத்தியோகஸ்தர்கள் சோதனை செய்வதாகச் சொல்லிக் கொண்டு வியாபார ஸ்தலங்களில் புகுவதும் பறிமுதல் செய்வதும் மக்களின் சொத்து சுதந்திரத்துக்கு முரணானது என்று தமிழக உயர்நீதி மன்றம் தீர்ப்பளித்துள்ளது. இத்தகைய நடவடிக்கைகள் அரசியல் சாஸனத்துக்கு விரோதமானது என்று தீர்ப்பில் கூறப்பட்டுள்ளது.

இதனால் காங்கிரஸ் சர்க்கார் அதிகார வர்க்கத்தின் அதிக்கிரமத்தை நிறுத்திவிடும் என நாம் எதிர்பார்க்கவில்லை. எந்த சாஸன விதிக்குச் சர்க்காரின் காரியம் விரோதமாக இருக்கிறதோ அந்த விதியைத் தங்களுக்குச் சௌகரியமாக மாற்றிக் கொண்டு விடுவார்கள். சொத்துரிமையைப் பாதிக்கும் சட்டம் செய்ய வேண்டும் என்பதுதானே அரசாங்கத்தின் நோக்கம்?



# ராஜாஜியின் கருத்துக்கள்

கல்கத்தாவில் இந்திய வர்த்தக சபையின் ஆதரவில் நடைபெற்ற பொருளாதார ஆராய்ச்சிக் குழு கீழ்க்கண்ட உண்மைகளைத் தெரிவிக்கிறது:

பிரிட்டனில் இரண்டு லட்சம் ரூபாய்க்கு மேல் வருமானமுள்ளவர்களின் மீதும், அமெரிக்காவில் ஒன்பதரை லட்ச ரூபாய் வருமானமுள்ளவர்களின் மீதும்தான் மிகவும் அதிகபட்சமான வரி விதிக்கப்படுகிறது. இந்தியாவிலோ 70,000 ரூபாய் வருமானத்திலிருந்தே அதிகபட்ச வரிகள் விதிக்கப்படுகின்றன.

அமெரிக்காவில் ஒருவருடைய வருமானத்தின் மீது விதிக்கப்படும் அதிகபட்ச வரி 70 சதவிகிதம்; பிரான்ஸில் 69; ஆஸ்திரேலியாவில் 67; ஸ்வீடனில் 65; மேற்கு ஜெர்மனியில் 53; இந்தியாவிலோ 88 சதவிகிதம்.

பிரிட்டனில் அதிகபட்ச வருமான வரி 91 சத விகிதம் எனினும் இதில் பல தள்ளுபடிகள் உள்ளன.

மேலும் இந்தியாவில் வருமான வரியுடன் சொத்து வரி, செலவு வரி, நன்கொடை வரி இவையும் சேர்ந்திருப்பதால் சிலர் நூறு ரூபாய் வருமானத்துக்கு நூற்று இருபது ரூபாய் வரி செலுத்த நேர்ந்திருக்கிறது.

அமெரிக்காவில் கம்பெனிகளின் மீது 48 சதவிகிதம் வரி விதிக்கப்படுகிறதெனில் இந்தியாவிலோ கம்பெனிகள் அறுபதிலிருந்து எழுபது சதவிகிதம் வரை வரி செலுத்துகின்றன.

இத்தகைய வரி விகிதத்துக்குப் பின் லாப நோக்கம் என்கிற இயற்கை விதிக்கு இடமெங்கே? அதனால்தான் உற்பத்தி குன்றி, நாட்டுப் பொருளாதாரம் பாழாவதைக் காண்கிறோம்.

மூலதனம் என்பது சேமிப்பு, முதலீட்டுத் திறன், தியாகம் இவற்றின்மீதுதான் உருவாகிறது. அக்கறையுடன் சொந்தக் கவனத்தைச் செலுத்திப் பேணினாலொழிய உற்பத்தி பெருகாது. முதலீடும் வியாபாரமும் சூதாட்டம் என்று எண்ணித் தடுத்தால், இயற்கைக்கு விரோதமான பலன்தான் ஏற்படும்.

* * *

வியட்நாமை விட்டு அமெரிக்கா ஒருபோதும் கிளம்பக்கூடாது என்பது ஹென்றி காபட் லாட்ஜின் கருத்து. அமெரிக்கா வெளியேறினால் வியட்நாமில் கம்யூனிஸ ஆட்சி ஏற்படுவதோடு மட்டும் நிற்காது என்கிறார் அவர். இது ஒரு சிறிய நாட்டின் சிறிய சண்டை அல்ல; கம்யூனிஸக் கொள்கைக்கும் சுதந்திர உலகத்தின் கொள்கைக்கும் நடக்கும் போர் என்கிறார். புரட்சிப் போர்கள்தான் எதிர்கால உலகை உருவாக்கும் என்பது கம்யூனிஸக் கருத்து; அந்நியர் தலையீடு இன்றி ஒவ்வொரு தேசமும் தன் விதியைத் தானே நிர்ணயித்துக் கொள்ள வேண்டும் என்பது சுதந்திர உலகின் கருத்து என்கிறார். சிறிய நாடுகள் கம்யூனிஸப் பிடியில் அகப்படாமல் காப்பாற்றிப் பிறகு அவற்றைச் சுதந்திரமாக வாழவிட வேண்டிய பொறுப்பு அமெரிக்காவுக்கு உள்ளது என்பது ஹென்றி காபட் லாட்ஜ் கூறுவதன் உட்கருத்து. 'கிரீஸ், கொரியா, மலேயா, பிலிப்பைன்ஸ் இவை எல்லாவற்றிலும் சுதந்திர உலகாகிய நாம்தான் வெற்றி பெற்றோம்; கம்யூனிஸம் தோல்வியுற்றது. வியட்நாமிலும் நாமே வெல்ல முடியும்' என்கிறார் ஹென்றி காபட் லாட்ஜ்.

* * *

காங்கிரஸை ஒழிப்பது எளிய காரியமல்ல. வனத்திலுள்ள பயங்கர மிருகங்களை வேட்டையாடச் செல்பவர்களின் துப்பாக்கிகளை அந்த மிருகங்கள் பறித்துக் கொண்டு விட்டால், அதன்பின் எப்படி வேட்டையாட முடியும்? மக்களின் உரிமைகளையும், பொருளாதார சக்தியையும் காங்கிரஸ் கைப்பற்றி விட்டபடியால்தான் மக்கள் அதை எதிர்க்க முடியவில்லை. ஆனால் இன்னமும் இளைஞர்கள் காங்கிரஸின் சலுகை ஆட்சிக்கு ஆளாகித் தங்கள் சக்தியை இழக்க வில்லை. அதைத்தான் அவர்கள் ஹிந்தி எதிர்ப்பில் நிரூபித்துக் காட்டி விட்டனர்.

* * *

''ஆங்கிலம் அந்நிய மொழி, நம்மை அடிமைப்படுத்திய மொழி' என்று ஹிந்திக்காரர்கள் கூறுகிறார்கள். ஆங்கிலேயர்தான் நம்மை அடிமைப்படுத்திய அந்நியரேயன்றி அவர்களின் மொழியில் அந்நியமோ, அடிமைத்தனத்தின் அடையாளமோ இல்லை. ஆங்கிலேயர்கள் இந்நாட்டை விட்டுப் போகும் போது தாங்கள் போட்ட தண்டவாளங்களையும் தந்திக் கம்பிகளையும் இங்கேயே விட்டுச் சென்றது போலவே ஆங்கிலத்

தையும் விட்டுச் சென்றிருக்கிறார்கள். ஆங்கிலேயர் போட்டது என்பதால் தண்டவாளத்தையும், தந்திக் கம்பிகளையும் நாம் அப்புறப் படுத்தி விட்டோமா, என்ன? ஆங்கிலத்தையும் அதேபோலப் பயன்படுத்திக் கொள்வதில் கௌரவக் குறைவு எதுவுமில்லை.

நம்முடைய நீதி பரிபாலன அமைப்பும், மருத்துவமும், பூகோளமும், ஸயன்ஸூம் ஆங்கிலத்திலேயே கற்றுத் தேர்ந்திருக்கிறோம். ஆங்கிலேயரையே எதிர்த்துப் போராடுவதற்கும் நாட்டை ஐக்கியப்படுத்தியது ஆங்கில மொழிதான். பல்லாண்டுகளுக்கு முன் திலகர், லாஜபதிராய், பிரோஸ்ஷா மேதா, காந்திஜி ஆகியோரின் ஆங்கிலப் பிரசங்கங்களைக் கேட்டுத்தான் நானும் மற்றும் பலரும் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டோம். அதற்கு நன்றியாகவே நாம் ஆங்கிலத்தை நீடிக்கலாம். ஆங்கிலேயர்கள் தங்கள் மொழியை நம் மீது பலாத்காரமாகத் திணித்தனர் என்கிறார்கள். பலாத்காரத்தின் கீழ் நமக்கு ஒரு பெரும் செல்வம் கிடைத்தது எனில் அதை வேண்டாம் என்று விட்டு விடுவோமா?

* * *

மொழிக்கும் அடிமைத்தனத்துக்கும் தொடர்பில்லை. ஆங்கில மொழி பேசிய அமெரிக்கர் ஆங்கிலேயருடன் போரிட்டுச் சுதந்திரம் பெறவில்லையா? ஆட்சி மொழி குறித்துச் சண்டை போடுவதற்குக்கூட இன்றும் ஆங்கிலம்தானே உபயோகமாகிறது?

* * *

ஹிந்தி ஆட்சி மொழியாக வேண்டும் என்கிறவர்களும் வெளி உலகத் தொடர்புக்காக ஆங்கிலம் வேண்டும் என்கிறார்கள். 'வெளித் தொடர்புக்கு ஒன்று, உள்நாட்டுத் தொடர்புக்கு ஒன்று என்பதாக இரண்டு மொழிகள் எதற்கு? வெளித் தொடர்புக்குப் பயனுறும் ஆங்கிலமே இப்போது நல்ல முறையில் உள்நாட்டிலும் நிர்வாகத்துக்குப் பயனாகி வருகிறதே!' என்று நாம் கூறுகிறோம்.

வீட்டில் அணிந்திருக்கும் புஷ்கோட்டுடனேயே வெளியிலும் போகலாம். 'அது கூடாது. வீட்டில் இருக்கும் போது சட்டை அணிய வேண்டும்; வெளியே போகும் போது அதன் மேல் கோட்டும் போட வேண்டும்' என்று நிர்ப்பந்தம் செய்வார்களா? ஆங்கிலம் எப்படியும் வேண்டும் என்று சொல்லிக் கொண்டு ஹிந்தியையும் புகுத்துவது இது போலத்தான்.

* * *

ஆட்சி மொழியாகப் பயன்படுத்தும் அதிகார பூர்வமான ஹிந்தி மொழி உண்மையில் ஹிந்தி மொழிக்காரர்கள் பேசும் மொழியல்ல. அது ஒரு செயற்கை மொழி.

முஸ்லீம் ஆட்சியில் வட இந்திய ராஜ்யங்களில் வழக்குக்கு வந்த பல வகை மொழிகளின் கதம்பமே ஹிந்தி மொழி எனப்படுகிறது. அதிலிருந்து அராபியச் சொற்களையும் பெர்ஷியச் சொற்களையும் நீக்கி விட்டு சம்ஸ்கிருதச் சொற்களை அதற்குப் பதிலாகப் போட்டு ஆட்சி மொழியைச் சுத்தி செய்து வருகிறார்கள். மக்களின் பேச்சிலிருந்தோ இலக்கியத்திலிருந்தோ உருவான மொழியல்ல அது. பத்திரிகைக்காரர்களையும், அகராதி நிபுணர்களையும் கொண்டு உற்பத்தி செய்யப்படும் செயற்கை மொழிதான், அகில இந்திய ஆட்சி மொழியாக, வேண்டும் என்கிற ஹிந்தி.

* * *

ஜவாஹர்லால் அவர்கள் ஆட்சி மொழி விஷயத்தில் என் கருத்தையே கொண்டிருந்தார்கள். ஆனால் அவர் பெரும்பான்மை மக்களிடம் நற்பெயரெடுப்பதில் எப்போதும் ஆர்வம் காட்டினார். இவ்விஷயத்தில் நான் வேறு மனப்பான்மை கொண்டவன். பொது மக்களிடம் நல்ல பெயரை இழக்க நேரிட்டாலொழிய என்னால் ஒரு பிரச்னையில் உற்சாகத்துடன் ஈடுபட முடிவதில்லை. நேரு அவர்கள் நமது நாட்டு மக்களிடையே சாதாரணமாகக் காண முடியாத பண்பாளராக இருந்தாலும், மக்களின் பாராட்டை இழக்கும் காரியங்களில் இறங்க மாட்டார். ஆட்சி மொழி விஷயமாக என் கருத்தைப் பூரணமாக ஒப்புக்கொண்டாலும், யோசனையைச் சட்டமாக்கத் தயங்கினார்.

# சென்னை இராஜ்ய கூட்டுறவு பாங்கு லிட்.

**379, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, சென்னை-1**



எங்கள் பாங்கில் நீங்கள் போடும் டிபாஸிட்டுகள் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படையான விவசாயத்திற்கும் விவசாயத் தொழில்களுக்கும் உதவி செய்யும்.



## டிபாஸிட்டுகளின்பேரில் அளிக்கப்படும் வட்டி விகிதங்கள்

(1965 பிப்ரவரி 17-ந் தேதி முதல்)

**புருடென்ஷியல் டிபாஸிட்டுகள் -**

மாதாந்திரக் குறைந்தபட்ச நிலுவைகளின் பேரில் வருடத்திற்கு 4 %

**(a) கால் டிபாஸிட்டுகள் ரூ. 25,000/-ம் அதற்கு மேலும்**

(மூன்று நாள் நோட்டீஸில் திருப்பிப் பெறக்கூடியது) வருடத்திற்கு 3 %

**(b) ஸீஸன் டிபாஸிட்டுகள் ரூ. 1,000/-ம் அதற்கு மேலும்**

| | |
|---|---|
| 15 நாட்கள் முதல் 30 நாட்கள் வரை | வருடத்திற்கு 3 % |
| 31 நாட்கள் முதல் 90 நாட்கள் வரை | ,, 4 % |

**(c) பிக்ஸட் டிபாஸிட்டுகள் ரூ. 100/-ம் அதற்கு மேலும்**

| | | | |
|---|---|---|---|
| 91 நாட்களும் அதற்குமேலும் | 6 மாதங்களுக்குள்ளாக | வருடத்திற்கு | 5 % |
| 6 மாதங்களும் ,, | 12 மாதங்களுக்குள்ளாக | ,, | 5½% |
| 12 மாதங்களும் ,, | 2 வருடங்களுக்குள்ளாக | ,, | 6 % |
| 2 வருடங்களும் ,, | 3 ,, | ,, | 6¼% |
| 3 வருடங்களும் ,, | 4 ,, | ,, | 6½% |
| 4 வருடங்களும் ,, | 5 ,, | ,, | 6¾% |
| 5 வருடங்களும் ,, | 6 ,, | ,, | 7 % |
| 6 வருடங்களும் ,, | 7 ,, | ,, | 7¼% |
| 7 வருடங்களும் அதற்குமேலும் | | | 7½% |

ரூ. 50,000/-மும் அதற்கு மேலுமுள்ள பிக்ஸட் டிபாஸிட் தொகைகளுக்குத் தனிப்பட்ட நபர்களுக்கும் தர்ம ஸ்தாபனங்களுக்கும், கல்வி டிரஸ்டுகளுக்கும் வழக்கமாக அளிக்கும் வட்டி விகிதங்களைவிட ¼ சத விகிதம் அதிகமாக வழங்கப்படும்.

36 மாதங்களுக்கும் அதற்கு மேலும் செலுத்தும் டிபாஸிட்டுகளின் அசலுக்கும் வட்டிக்கும் சென்னை அரசாங்கம் உத்திரவாதமளிக்கிறது.

ஆர். கனகசபை எம்.பி.
தலைவர்

டி. வர்த்தமானன்
செயலாளர்



# செய்திப் படங்கள்

1. பம்பாய் தாஜ்மகால் ஹோட்டலில் ஜே. கே. ஹெலன் கர்ட்டிஸ் ஸ்தாபனத்தார் நடத்திய அழகு ராணிப் போட்டியில் மிஸ் மரியா பாரிடோ 'ராணி'யாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு முதல் பரிசு பெற்றாள்.

★

2. வங்க மொழிக்கும் தமிழுக்கும் இலக்கியப் பாலமாகத் திகழும் கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கம் வெளியிட்டுள்ள நூல்களைக் காரியதரிசி திரு ப. ந. தியாகராசன் உதவி ஜனாதிபதி டாக்டர் ஜாகிர் ஹுஸைனிடம் அன்பளிப்பாக வழங்கினார்.

★

3. வானதி பதிப்பகத்தாரின் நேருவின் மணிவாசகம், வீர மகாசக்தி ஆகிய இரு புத்தகங்களின் வெளியீட்டு விழா சத்தியமூர்த்தி பவனில் நடந்தது. திருமுருக கிருபானந்தவாரியார் வாழ்த்துரை வழங்குகிறார்.









★

4. லூயி பிஷரின் மகாத்மா காந்தி சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்டு பிரிட்டிஷ் நடிக டைரக்டர் ரிச்சர்டு ஏ. அட்டன்பரோ, அண்ணலின் திரைப்படம் ஒன்றைத் தயாரிக்க விருக்கிறார். டைரக்டர் அட்டன்பரோவும் அவர் துணையாளர் கோதாரியும், லண்டன் பி.பி.ஸி. நிலையத்தில் ராணி தாப்போடு அந்தப் படத்தைப்பற்றி உரையாடிக் கொண்டிருப்பதைக் காண்கிறீர்கள்.



# கோயம்பேடு கோயிற் பணி

தமிழகத்தில் சென்னை நகரம் சைவ, வைணவ ஆலயங்களுக்கும், ஆழ்வார்கள், நாயன்மார்கள் ஆகியவர்களுக்கும் இடம் தந்து இறவாப் புகழ் பெற்று விளங்குகிறது. சைவ, வைணவ மதங்களின் ஒருமைப்பாட்டுக்கு வித்திடப்பட்டதும் சென்னையில்தான்.

இத்தகைய தெய்விகப் பெருமை பெற்ற சென்னை நகருக்கு ஆறு கல் தொலைவில், பெங்களூர் நெடுஞ்சாலையில், அமைதியான சூழ்நிலையில் கோயம்பேடு என்று ஒரு சிற்றூர் இருக்கிறது. ஸ்ரீராம பிரானின் புதல்வர்களான லவகுசர்களைச் சீதாதேவி ஈன்றெடுத்தது இங்குதான் என்றும், குசலவபுரம் என்பதே மருவிக் கோசைநகராகிப் பிறகு கோயம்பேடாகி விட்டது என்றும் ஸ்தல புராணம் கூறுகிறது. முனிபுங்கவராகிய வால்மீகியின் ஆசிரமமும் இங்குதான் இருந்ததாம். ஸ்ரீ ராமபிரானின் அசுவமேத யாகக் குதிரையை லவகுசர்கள் பிடித்துக் கட்டி விடுகிறார்கள்; ஸ்ரீராமன் அவர்களைத் தம் புதல்வர்கள் என்று அறியாமல் போர் புரிந்து பிரக்ஞை இழந்து விடுகிறார். பிறகு வால்மீகி முனிவர் சிவலிங்கத்தை ஸ்தாபித்து லவகுசர்களுடன் இங்கு வழிபட்டிருக்கிறார்; அதன் பலனாக ஸ்ரீராமன் உயிர்த்தெழுகிறார்; அவ்வாறு அருள் புரிந்த பரமேசுவரன் இங்கு கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கிறான் என்றும் கூறப்படுகிறது. இங்கு மூலஸ்தானத்தில் உள்ள சிவலிங்கம் வடக்குப் பார்த்திருப்பது மிகவும் அபூர்வக் காட்சியாகும். மேலும், கைலாயத்தையும், வைகுண்டத்தையும் ஒருங்கே தரிசிக்கும் அரிய வாய்ப்பும் இங்கே கிடைக்கிறது. சிவன் கோவிலுக்குப் பக்கத்திலேயே, வைகுண்டவாசப் பெருமாள் சந்நிதியும் இருக்கிறது! இவ்வாலயங்கள் இரண்டும் மிகப் புராதனமானவை. சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மூன்றாவது குலோத்துங்க சோழன் கோசை நகர் ஆலயங்களைப் பரிபாலித்து வந்திருக்கிறான். விஜயநகர மன்னர் புக்கராயர் இத்தலத்தில் விசேஷ ஈடுபாடு கொண்டவராயிருந்திருக்கிறார். சரித்திர ஆராய்ச்சிக்குப் பேராதரவாக விளங்கும் கல்வெட்டுக்கள் ஏராளமாக இருக்கின்றன இந்தத் தலத்தில்.

இந்தத் திவ்விய ஸ்தலத்தின் கோபுரங்கள், மண்டபங்கள், திருக்குளம் ஆகியவற்றை ஜீர்ணோத்தாரணம் செய்து கும்பாபிஷேகம் செய்யக் குழுவினர் நிர்மானித்திருக்கின்றனர். குழுவின் காரியதரிசியும், பொருளாளருமான திரு கே. ஆர். நந்தகோபால் அவர்களின் உழைப்பின் காரணமாகத் திருப்பணி வேலைகள் நன்கு நடைபெற்று வருகின்றன. 8—2—65 அன்று இவ்வாலயத் திருப்பணியின் அங்குரார்ப்பணமாக நூதன நவக்கிரகப் பிரதிஷ்டை ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஆசார்ய சுவாமிகளின் ஆசியுடன் திருவலம் சிவானந்த மௌன சுவாமிகளின் திருமுன் சிறப்பாக நடைபெற்றது.

நூதன நவக்கிரகங்களின் விசேஷம் குறிப்பிடத்தக்கது. ஒன்பது கிரகங்களும் அவரவர்க்குரிய வாகனங்களுடன் காணப்படுகின்றன. ஒன்பது கிரகங்களுக்குள் முக்கியமான சூர்யபகவான் மட்டும் இரு தேவியர்களுடன் தரிசனம் தருகிறார். ஏழு குதிரைகள் பூட்டிய தேரில் பவனி வருகிறார். கஜங்கள் அத்தேரின் ஒரே சக்கரத்தின் அச்சினைத் தாங்கிக் கொண்டிருக்கின்றன.

படத்தில், நூதன நவக்கிரக சந்நிதியில், சிவானந்த மௌன சுவாமிகளும், ஆலயத் திருப்பணிக் குழுவின் பொருளாளர் திரு கே. ஆர். நந்தகோபாலும் பக்தகோடிகளுடன் காணப்படுகிறார்கள்.

# வாருங்கள் ... வசந்தத்தை வரவேற்போம்

குளிர்மையானதும் கவலைக்கிட மற்றதுமான இந்த பாடா செருப்புகள் மென்மையாகவே உங்களை நெடுந் தூரம் இட்டுச் செல்லும். எல்லாக் காலங்களிலும் புதுக் கருக்கழியாமல் இருப்பதற்குக் காரணம், இவை மிருதுவானதும் வெகுகாலம் நீடித்துழைக்கக்கூடியதுமான நோக்க ளால் உருவாக்கப்பட்டிருக்கின்றன தவிர, உங்கள் அழகிற்கு அழகுடன் சௌகரியமும் தருவதற்கென்றே தயாரிக்கப்பட்டிருப்பதை நன்கு உணர்வீர்கள். உங்கள் அருகிலிருக்கும் பாடா ஸ்டோரிலுள்ள எழில் மிகுந்த பலவகை செருப்புகளைப் பார்வையிட தவறாதீர்கள்.

**Bata**



5.25



6.25



சந்திரா 6.95



8.95



## ஊஞ்சல்

திரைப் படங்களைக் காட்டிலும் இப்பொழுது நாடகங்கள் வளர்ச்சி பெற்று வருகின்றன என்பதற்குச் சான்று பகருகிறது மேற்கு மாம்பலம் அமெச்சூர்ஸின் 'ஊஞ்சல்' என்னும் நாடகம்.

திரு ஆர். எஸ். மணி நடிப்புக்குப் பொருத்தமாகக் கதை வசனம் எழுதியுள்ளார். பாத்திரங்களின் மனங்களும் பல இடங்களில் நடிப்புக்கேற்ப ஊஞ்சலாடுகின்றன. ஏன்? கதாநாயகியின் மனம்கூட ஒரு வகையில் ஊஞ்சலாடிக் கதாநாயகனை விட்டு வேறு ஒருவனை ஏற்றுக் கொள்ளுகிறது. அது மட்டுமா? எழுதிய ஆசிரியரின் மனமேகூட ஊஞ்சலாடியிருக்கிறது. கதாநாயகியைக் கதாநாயகனோடு சேர்த்து வைப்பதா, கொன்று துயர முடிவாக்கி விடுவதா? அல்லது வேறு ஒருவனோடு சேர்த்து வைத்துத் துயரத்தையும் சந்தோஷத்தையும் ஒன்றாக முடி போடுவதா என்று! இந்த நாடக நடிகர்கள் அனைவருமே பாத்திரங்களின் தன்மை யறிந்து நடித்திருக்கிறார்கள். எழுத்தாளராக — கதாநாயகனாக வரும் திரு மகாலிங்கம் ஜெமினி கணேசனின் காரியதரிசி. அவரோடு பழகிப் பழகி அவராகவே நடிக்க முயன்றுள்ளார்.

மணக்கால் மணி இந்த நாடகத்தை டைரக்ட் செய்திருக்கிறார். எழுத்தை அச்சில் காணும் ஆர்வம்படைத்த சோணுவாக வந்தும் ஜமாய்க்கிறார். பாராட்ட வேண்டிய முயற்சி.

**கதை:** சில வருஷங்களுக்கு முன்பு வெளிவந்த 'பாச மலர்' படத்தின் கதையையே வேறு கோணத்திலிருந்து உருவாக்கியுள்ளார்கள். நவராத்திரி படக் கதையின் சாயலும்கூட அடிக்கிறது — தங்கை, தான் காதலித்தவனை நினைத்து வெளியேறும் கட்டத்தில்.

**காதல்:** இதுவரை வந்த படங்களில் கதாநாயகன் தான் கதாநாயகியைக் காதல் புரிவான் — அதாவது வலியச் சென்று வம்புகள் செய்வான். பெண் அப்படிச் செய்தால் அது வில்லியாகத்தான் இருக்கும். ஆனால் இந்தப் படத்தில் தேவிகா—சிவாஜி கணேசனின் நடிப்பு விரசத்தை எட்டுகிறது. பாலாஜி, மணிமாலாவின் மேல் புடவையை இழுப்பதும் தமிழ் மண்ணுக்கு உகந்த காரியம் அல்லவே?

**நடிப்பு:** நடிப்புக்கு நடிகர் திலகம் இருக்கும் போது மற்றவர்கள் கவலைப்படத் தேவையில்லை; கவலைப்படவுமில்லை. அதைத் திலகம் நிரம்பச் செய்து நம்மை அழ வைத்து விடுகிறார்.

**பாடல்கள்:** 'காகிதத்தில் கப்பல் செய்து' என்ற கருத்துள்ள ஒரு பாடலைத் தவிர மற்றவை ஒலிக்கவில்லை.

**நகைச்சுவை:** நாகேஷ் குறை சொல்ல முடியாதபடி செய்திருக்கிறார்.

மொத்தத்தில் நடிகர் திலகத்தின் நடிப்புக்காகவும் சிரிக்கச் செய்யும் நாகேஷுக்காகவும் அன்புக் கரங்கள் படத்தைப் பார்த்து வைக்கலாம்.

## அன்புக் கரங்கள்





## சியாமளா சேச்சி

சியாமளாவைப் பெண் பார்க்க வந்தவன் அவன் தங்கை சாந்தாவின் அழகைக் கண்டு மயங்கி அவளை மணந்து கொள்கிறான். அவன் ஏற்கனவே மணமானவன்; அவளை விவாகரத்து செய்து விடுகிறான். பிறகு சியாமளாவின் தந்தை குடும்பத்தை விட்டு வெளியேறி விடுகிறார். தாயும் இறந்து, வாங்கின கடனுக்கு வீடும் பலியாகிறது. அநாதையான சியாமளா பல அவதிகளுக்கு உள்ளாகிறாள். கடைசியில் எல்லாச் சிக்கல்களும் தீர்ந்து விடுகின்றன. சியாமளா நர்ஸ் பணியை மேற்கொள்கிறாள்.

சியாமளாவுக்கும் வேணுவுக்கும் ஏற்பட்ட நட்பைச் சட்டென்று காதலாக மாற்றி விடாமல் கௌரவமான நட்பாகவே காட்டியிருப்பது மிகவும் நன்றாயிருக்கிறது.

அநாவசியமான செட்டிங்குகள் போடாமல், இயற்கைக் காட்சிகளை வைத்துக் கொண்டே படத்தைத் தயாரித்திருப்பது புதுமைதான்.

சியாமளாவாக நடிக்கும் அம்பிகா தாம் ஏற்ற பாத்திரமாகவே மாறி அருமையாக நடிக்கிறார். வேணுவாக நடிக்கும் ஸத்யன் நாகரிகமான மேக்கப் எதுவுமின்றி அமைதியாக நடிக்கிறார். அடூர்பாஸியின் தரகு வேலைகள் தமாஷாயிருக்கின்றன. இந்த மலையாளப் படத்தில் 'டெம்போ'வும் இருந்து, முடிவையும் புதுமையாக மாற்றியிருந்தால் சிறந்த படமாகக் கொள்ளலாம்.



# கடலை நோக்கி...

நீண்ட நெடுஞ்சாலை; அதற்குப் பெயர் பூவிருந்தவல்லிப் பெரிய சாலை. மூலை முடுக்குகளிலெல்லாம் ஓய்வற்ற துடிப்புக்கள்தாம். சன்னே, கருமமோ—அத்தனை சுறுசுறுப்பு. இடையிடையே போக்குவரத்துச் சாதனங்களின் பயங்கர அலறல்கள்; சத்தற்ற சங்கீதத்தின் சுருதிபேதம் என்றுதான் சொல்ல வேண்டும்.

இவற்றைப் பற்றி மைனு தேவி கவலைப்பட வேண்டுமே! அவளுடைய கவலையே வேறு. அது கவலைக்கு அப்பாற்பட்ட ஒரு சவரூக்க நிலை—மயான சிந்தை. கால்போன போக்கில் நடந்து கொண்டிருந்தாள். தான் ஒரு நடைப் பிணம் என்பது இப்போதைய அவளுடைய இறுதியான முடிவு. அவள் நடந்துகொண்டேயிருந்தாள்—தன்னை மறந்த வேகச் சுழிப்புடன் நடந்து கொண்டேயிருந்தாள். புவனமே அவள் முன் கடல்போல் கொந்தளித்து ஊழியார்ப்பாட்டம் செய்வது போன்ற ஒரு பிரமை. இன்னும் வேகமாக நடந்து கொண்டேயிருந்தாள். ஆமாம்; உண்மையிலும் அவள் கடலை நோக்கித்தான் நெடும் பயணம் செய்து கொண்டிருந்தாள். சாகத் துணிந்தவர்களுக்குச் சமுத்திரம் முழங்கால் ஆழம்தானே?

மூர்மார்க்கெட்டையும் கடந்துவிட்டாள். பக்கத்திலும், எதிரிலும் யார் வந்தால் என்ன? எது போனால் அவளுக்கு என்ன? ஒளி குறைந்த கண்கள்; இற்த உலகச் சுமை குறைந்த இதயம்; நடை மெலிந்த நடை; நாட்டம் செத்த மனம். உலகாவது, வாழ்வாவது! சே, போ!

சென்ட்ரல் நிலையம் வந்தது. சென்னைக்கு 'சென்ட்ர'லாக இருக்கலாம்! அவளுக்கு அது கோணல்தானே?

நடந்து கொண்டேயிருந்தாள்.

சென்ட்ரல் நாற்சந்தியின் நடுவே போக்குவரத்தைக் கட்டுப்படுத்தும் 'ட்ராஃபிக்'—போலீஸ்காரருடைய 'ஸ்டாப்' பலகை எதை எதையோ நிறுத்தி எதற்கெதற்கோ வழி விட்டது. அப்படி மட்டும் விடுமானால்...?

மைனு தேவி வரம்புக்கு மீறி நடுச் சாலையிலேயே வேகமாக நடந்துகொண்டிருந்தாள். ! !

''சர்ர்ர்ர்ர்ர்.....சரக்.........''! !

பூதாகாரமான அந்த 'அரசாங்கப் பெருந்து வண்டி அந்த எக்கச்சக்கமான இடத்திலும் பெரிய மனம் கொண்டு 'பிரேக்' போட்டு நின்றது. மயிரிழை தானென்று யாரும் வியந்து, அதிர்ந்து, அலறிக் கூச்சலிட்டுப் பேச்செழுப்பினர். இதற்குள் பலரும் வந்து கூடினர்; சும்மா வேடிக்கை பார்க்கத்தான்!

'டிராஃபிக்' போலீஸ்காரர் மூத்தை யாவும் இறக்கி வந்தார் என்றால் ஏதோ 'கேஸ் புக்' பண்ணவல்ல. அவருடைய வேலை பார்க்கும் நேரம் முடிந்து விட்டது. அந்தப் பணியை இன்னொருவர் மேற்கொண்டுவிட்டார்.




இறங்கி வந்த முத்தையா விபத்து நடக்க விருந்த இடத்துக்கு வந்து கூட்டத்தைக் கலைத்துவிட்டுப் பேருந்து வண்டிக்கு முதலில் வழி விட்டார்.

எதையும், யாரையும் அப்போதும் மைனாதேவி சட்டை செய்தாளில்லை. அவள் மீண்டும் தன் பயணத்தைத் தொடர்ந்தாள். நினைவில் ஐயத்தின் ஒரு சொடுக்கு. கண்களை அகல விரித்த முத்தையா என்ன எண்ணினாரோ, பின்னே நடந்தார்.

''ஏம்மா ! வழியைப் பார்த்து நடக்கக் கூடாதா? கொஞ்சம் தவறியிருந்தால் விலை மதிக்க முடியாத உயிரையல்லவோ நீங்கள் இழந்திருப்பீர்கள் ?''

கல்லுக்கு இரக்கமுண்டோ, இல்லையோ, அந்தப் போலீஸ்காரருக்கு இரக்கம் இருந்தது. அமைதியாகவே கேட்டார். மைனாதேவியின் செவிகளில் சொற்கள் விழ வேண்டுமே !

''என்னம்மா; நான் கேட்கிறேன்; நீங்கள் உங்கள் போக்கில் போய்க்கொண்டே இருக்கிறீர்களே!'' என்று கூறினார்.

''................................''

அவள் நடையையும் தளர்த்தவில்லை ; தலையையும் திருப்பவில்லை.

முத்தையாவின் குரலில் இப்போது, 'போலீஸ் மிடுக்கு' புகுந்தது: ''யாரம்மா நீ? எங்கே போகிறாய்? உன்னைப் பார்த்த சந்தேகத்தில் இப்படிக் கேட்கிறேன். நான் ஒரு போலீஸ்காரன்!''

அதட்டலைக் கேட்டுத் திரும்பினாள் மைனாவதி. எப்படித்தான் திரும்பினாளோ ? கண்களிலே நீரலைகள் மோதின.

''மன்னித்துக் கொள்ளம்மா! கடமை உணர்வோடுதான் இப்படிக் கேட்டேன். நான் மக்களுக்குக் காவலன். என்னை நீ அலட்சியப்படுத்தி விட்டதாக நினைத்தேன். அதனால்தான் அதட்டி விட்டேன். அழாதேம்மா. விஷயத்தைச் சொல்! உனக்கு என்ன நேர்ந்து விட்டது? ஏன் இப்படி வழி தெரியாமல் நடந்து கொண்டிருக்கிறாய் ?'' சுபாவத்திலேயே முத்தையா இரக்கம் உள்ளவர்தான்.

"…………… ……………"

"சொல்லம்மா! என்னால் உனக்கு எந்தவிதமான இடையூறும் ஏற்படாது."

இதயத்திலே கடல் பொங்கியது; சுவாசத்திலே புயல்! என்றாலும் தட்டுத் தடுமாறிச் சொன்னாள்: "தற்கொலை செய்து கொள்ளப் போகிறேன்!"

தற்கொலை....! எத்தனை துணிவாகச் சொல்லுகிறாள் இந்தப் பெண்!

"சட்டவிரோதமான ஒன்றை என்னிடமே எத்தனை துணிவாகச் சொல்லுகிறாயம்மா நீ!"

நீண்ட பெருமூச்சு பிறந்தது. வெறுமை நிறைந்த சிரிப்புடன் உதடுகள் அசைந்தன: "இந்த உலகில் எத்தனை செயல்கள் சட்டவிரோதமாக நடைபெறுகின்றன, தெரியுமா, ஐயா?"

"தெரியாமல் பல நடக்கலாம்; ஆனால் தெரிந்து செய்ய எப்போதுமே நாங்கள் சம்மதித்ததில்லை. ஏம்மா! பார்க்க அழகாகவும், லட்சணமாகவும் இருக்கிறாய்! வாழ்வில் என்ன கசப்பம்மா உனக்கு ஏற்பட்டு விட்டது? என்னிடம் சொல்லம்மா; என்னால் முடிந்ததைச் செய்கிறேன்."

எப்படித்தான் சிரித்தாளோ.... கலகலவென்றே சிரித்து விட்டாள். பித்தத்தில் வெடித்த சிரிப்போ? சித்தத்தில் மடிந்த சிரிப்போ!........ அந்தச் சிரிப்பினூடே சொற்கள் உதிரத்தான் செய்தன. நான்கு கால்கள் இப்போது திசை மாறி நடந்தன.

இந்தப் பரந்த உலகில் வழுக்கைக்கு எப்படி மருந்து கிடையாதோ, அப்படித்தான் திரைப்படப் பித்துக்கும்!

மண் மீனாய் வாழ்ந்த அவள் விண்மீனைக் கண்டாள்; அது கலைத் தத்துவம் பேசியது. திரை மீனாக ஒளிர்விட முயன்றாள். கொஞ்சம் படிப்பு, நாடகம் அவளை நன்றாகவே பயன்படுத்திக் கொண்டது.

மைனாதேவியும் இப்படியான கலைக்குத்தான் முதலில் தன்னைப் பலி கொடுத்துக் கொண்டாள். பிழைப்பும் அதுவாகவே ஆகிவிட்டது. இக் குற்றத்துக்கு முதற் பயன் பெற்றோரும், உற்றோரும் பகையாயினர்.

பல படங்களில் உதிரி நட்சத்திரமாக — எக்ஸ்ட்ராவாக நடிக்க நேர்ந்ததே யொழிய, தனக்காக நாலு வசனம் பேசி நடிக்கும் ஒரு சாதாரண வாய்ப்புக்கூடத் தன்னை வந்து நாடவில்லை. எத்தனை நாட்களுக்குத்தான் இந்தத் தவம் செய்ய முடியும்? வயிற்றுப் புரட்சி—அது கிடக்கட்டும்; 'ஒருவாறு' அடக்கிக் கொள்ளலாம். ஆனால் வயதுப் புரட்சி? முருங்கை மரத்து வேதாளம் போல் அது மேலே மேலே ஏறிக் கொண்டே போகிறதே!

வயதாகி விட்ட பிறகு, அம்மா வேடம் போட்டாலென்ன, அடியோடு ஒழிந்தாலென்ன? இதுவரை வராத வாய்ப்பு இனி மேல்தானா வரப்போகிறது? நாலு பேர்கள் மத்தியில் வாழ வேண்டுமே! சே! சவமாக இனி நடமாடுவதைவிட, அதிர்ஷ்டக்கட்டையாக உலவுவதைவிடச் சாவது மேலல்லவா?

பல நாட்கள் சிந்தனைப் போராட்டத்துக்குப் பிறகு, மைனாவதி அன்று மரணத் துணிவுடன் கடலை நோக்கி நெடும் பயணம் செய்யத் தொடங்கி விட்டாள். விதியென்ற அந்தப் பெரிய 'டிராபிக் கான்ஸ்டபிள்' அப்போதைக்கு வழி விட்டால்தானே? முத்தையா வடிவில் அது 'ஸ்டாப்' பலகையைக் காட்டி விட்டது.

மைனாதேவியைப் பலவாறு சமாதானப்படுத்தி அழைத்துக் கொண்டு வரப்பட்ட பாடு பெரும் பாடாகப் போய் விட்டது. போலீஸ்காரர் முத்தையாவுக்கு. அவர் கூறிய எந்தச் சமாதானத்தாலும் மைனா தேவியின் மனம் மசியவில்லை. கடைசியாகக் கூறிய "கவலைப்படாதேம்மா, மைனாதேவி! எனக்கு வேண்டிய ஒரு படத் தயாரிப்பாளர் இருக்கிறார். என் பேச்சைத் தட்ட மாட்டார். அவரிடம் அழைத்துச் சென்று உனக்குச் சிபாரிசு செய்கிறேன். நிச்சயம் உன் எண்ணம் நிறைவேறும். அது வரை நீ என் வீட்டிலேயே இருக்கலாம்!" என்ற இரக்கம் கசியும் சொற்கள்தாம் அவளை இந்த உலகுக்கு மீண்டும் இழுத்து வந்தன — இணங்கச் செய்தன.

வீட்டுக்கு வந்ததும் மனைவியை அழைத்து அறிமுகம் செய்து வைத்தார் முத்தையா. நடந்ததைச் சொன்னார். இரக்கம் நிறைந்த கதைதான் மைனாதேவியின் 'வாழ்க்கைக் குறிப்புக்கள்!'

முத்தையாவின் மனைவி ராசம்மாள் மிகவும் நல்லவள். பர்த்தாவுக்குப் பிடித்த — ஏற்ற பதிவிரதை! சினிமாவைத் தெரிந்தும் அதைப் பற்றிச் சிந்திக்கத் தெரியாத ஜீவன்களுள் 'அது'வும் ஒன்று.

எப்படிப் பார்த்தாலும் முத்தையா கொடுத்து வைத்தவர்தான்., நல்ல மனைவி வாய்க்கப்பெற்ற அவரைவிட அதிர்ஷ்டசாலி இந்த உலகில் எவன் இருக்கிறான்?

மைனாதேவியை அவர்கள் அன்போடுதான் உபசரித்தார்கள். வீடு என்னமோ சிறிய வீடுதான். வெளியே தாழ்வாரம் என்று சொல்லிக்கொண்டிருக்கும் இரண்டுக்கு நாலடி இடம்; அதுவே சமையற்கட்டும். நூறு ரூபாய் வாடகையில் காலட்சேபம் செய்தவள் மைனாதேவி. பிடித்தும் பிடிக்காமலுமாக இருந்தாள். சுடுகாட்டைவிட அது எவ்வளவோ மேலல்லவா?

அடுத்த வாரமே மைனாதேவியை அழைத்துக் கொண்டு தமக்குத் தெரிந்த அந்தப் படாதிபரைக் காணச் சென்றார் முத்தையா.

திருவாளர் சோணாசலம் பிள்ளை பிரபலமான படத் தயாரிப்பாளர். அவரை அறியாதவர்களே இல்லை. அவர் பெயரில் மூன்று திரைக் கொட்டகைகளும், ஒரு படப் பிடிப்பு நிலையமும், நான்கு 'பிலிம்ஸ்' கம்பெனிகளும் இருந்தன. இவற்றுடன் ஒரு 'பைனான்ஸியர்ஸ்' கூட்டுறவு ஸ்தாபனமும் இருந்தது. 'ஏதோ, ஒரு முக்கிய காரணமாக முத்தையாவுக்கு அவர் பெரிதும் கடமைப்பட்டிருந்தார். அதற்காக அவர் ஆயிரக்கணக்கில் பண உதவி செய்யவும் முன்வந்தார்; ஏன், இன்றும் காத்திருக்கிறார். அவ்வளவுக்கு இந்த விஷயத்தில் அவர் நல்லவர்தான். அவரைவிட முத்தையா நல்லவராயிற்றே! அதுவும் எந்த விஷயத்திலும்! நேர்மை நிறைந்த அந்தப் போலீஸ்காரர் பணத்தைக் கண்ணால் பார்க்கவும் கூசினார்.

# கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயிலை உபயோகித்து உங்கள் கேசத்திற்குப் போஷாக்-



3
சம்பியமான
வாசனைகளில்,
ரோஜா,
லவண்டர்,
மல்லிகை




# கையும் நறுமணத்தையும் அழகையும் அளியுங்கள்

புதிய கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயிலை தினந்தோறும் தேய்த்துக் கொள்வதனால், உங்கள் மயிர்க்கால்கள் புத்துயிர் பெற்று, அபரிமிதமான, நீண்ட கேசவளர்ச்சிக்கு உதவுகிறது; தெளிதெளியான கேசத்தின் இயற்கை அழகை வெளிப்படுத்துகிறது...உங்களுக்குப் பிடித்தமான கேச அலங்கரிப்பை எடுத்துக் காட்டுகிறது.

**அழகிய கேசத்தைப் பெற, கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயிலை உபயோகியுங்கள்.**




உங்கள் கேசத்தின் உண்மை அழகை
வெளிப்படுத்த உதவுவதும், குடும்பத்தினர்
விரும்பும் நறுமணத்துடனும் கூடிய
**கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலின்**
ஒரு உன்னதமான துணைத்தயாரிப்பு.

COHO.G.E.TAR.

# ரொம்ப சாப்பிட்டு விட்டீர்களா?



மானேர்ஸ்

ஸ்பார்க்ளிங்

# ஹெல்த் ஸால்ட்

அருந்துங்கள்



## ஒவ்வொரு கிளாஸும் உங்களுக்கு ஆரோக்கியம் அளிக்கிறது!

- நீங்கள் அதன் குமிழிட்டு புத்துணர்ச்சியூட்டும் எலுமிச்சை மணத்தை ரசிப்பீர்கள்!
- உங்கள் ஜீரண உறுப்புகளுக்கு அது துரிதமாக ஆரோக்கியமளிப்பதால் நீங்கள் சுகமடைவதை உணர்வீர்கள்!
- உங்களுக்கு செலவு குறைவு, ஆனல் சிறந்த தரமானதை நீங்கள் பெறுவீர்கள்!
- உங்களுக்கு இரட்டை டோஸ் பாக்கெட் வசதியானது ... குடும்ப உபயோகத்திற்கென பாட்டில் சிக்கனமானதென்பதைக் காண்பீர்கள்.







GEOFFREY MANNERS & CO., LTD.

இப்போதும் ஒரு பெண்ணின் உயிரைக் காப்பாற்றும் பொருட்டுத்தான் படாதிபரை நாடியிருந்தார் முத்தையா.

''ஐயா! இவள் என்மகள் போல. இவளுக்கு நீங்கள் எப்படியும் அடுத்துத் தயாரிக்கப் போகும் படத்தில் ஒரு கதாநாயகி வேஷம் கொடுத்தால், அதுவே எனக்கு நீங்கள் செய்யும் பெரிய உபகாரமாகும்!''

சோணாசலம் பிள்ளைக்குச் சிரிப்பாய் வந்தது. இப்படியும் ஒரு மனிதரா?, பிழைக்கத் தெரியாத மனிதர்? நேற்று வரை 'எக்ஸ்ட்ரா'வாக இருந்த இந்தப் பெண் 'பொம்மை'க்குக் கதாநாயகி வேஷம் கேட்கிறாரே! அதுவும் தம்முடைய மகள் போலென்று அறிமுகப்படுத்தி! இவருக்கென்ன பைத்தியமா?

''ஏன், சார்! யோசிக்கிறீர்கள்?'' — முத்தையா புரியாமல் கேட்டார்.

பொன்னான பற்களைக் காட்டிச் சிரித்த வண்ணம் சோணாசலம் சொன்னார்: ''முத்தையா! நீ சொல்றியேன்னு மறுக்க முடியாமல் யோசிக்கிறேன்.''

''யோசிப்பதற்கென்னங்க? நல்ல திறமையிருக்கிறது. எனக்குச் செய்கிற உதவியென்று இவளுக்கு நீங்கள் செய்ய வேண்டும்! உங்கள் சிரமம் எனக்குத் தெரிகிறது. இருந்தாலும் ஒரு சான்ஸ் கொடுத்துப் பாருங்களேன்!''

அடுத்த விநாடியே பொறுப்பாளரை அழைத்தார் பிள்ளையவர்கள். உடனே ஒப்பந்தம் போடச் செய்தார். அடுத்துத் தயாரிக்கப் போகும் 'தன்னிழல் தன்னோடு' என்ற படத்தில் இரண்டாம் கதாநாயகி வேடம் கிடைத்தது. மைனாதேவியின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. இந்த உலகமே — சற்று முன்வரை இருண்டதாகத் தெரிந்த இந்த உலகமே — ஒளி மயமானதாகத் தெரிந்தது.

நாட்கள் கலகலப்பாக நகர்ந்தன. மைனாதேவியும் பளபளப்பாக மின்னி மகிழ்ந்தாள். திரை வானில் நட்சத்திரமாகப் போகும் புகழ்ப் போதையில் நடமாடினாள்.

படப் பிடிப்பும் ஆரம்பமாகி விட்டது. அதற்கு மேலும் அவளைத் தன் வீட்டில் வைத்துக் கொண்டிருக்க முத்தையா விரும்பவில்லையோ, மைனாதேவி ஒப்பவில்லையோ, பழையபடி தனிக் குடித்தனமே புரியத் தொடங்கி விட்டாள் மைனாதேவி.

படமும் முடியும் தறுவாயில் இருந்தது. ஷூட்டிங்கின் போது டைரக்டர் உள்பட, ஏனைய 'லைட்பாய்ஸ்' வரை மைனாதேவியின் சிறந்த நடிப்பைக் கண்டு மகிழ்ந்து பாராட்டினர். இரண்டாம் நடிகையர் திலகம் என்றே அவர்கள் பேசிக் கொண்டனர். மைனாதேவிக்கும் பெருமை தாளவில்லை. படத்தை 'ரஷ்' போட்டுப் பார்த்ததில் அனைவருக்குமே முழுமையான ஒரு நிறைவு. வானளாவப் புகழ்ந்து கைகுலுக்கினர் சில பெரிய மனிதர்கள். விநியோகம் படபடத்தது. முதல் கதாநாயகி முல்லைவதனத்துக்கு முகத்தில் ஈயாடவில்லை. மூச்சுத் திணறியது. பேச்சு வறண்டது. இந்தப் படத்துக்குப் பிறகு தன்னை ரசிகர்கள் எங்கே 'அவுட்' பண்ணி விடுவார்களோ என்று பயந்தாள். அவள் பயந்ததிலும் தவறில்லை. மைனாதேவியின் நடிப்பின் சிறப்பு அப்படி! நடிப்புக்கே ஒரு சிகரம் வைத்துவிட்டாள்.

படம் முடிந்து விட்டது. தணிக்கைக்குப் போக வேண்டியதுதான் பாக்கி. பொற்கனவு ஒன்று நிறைவேறி விட்டதாகப் புளகாங்கிதம் அடைந்து பூரித்தாள் மைனாதேவி. அந்த மூச்சில் நேரே முத்தையாவின் இல்லத்தை நாடிச் சென்றாள். வாடகைக்காரில்தான்.

## குட்டிக் கதை

நான் விரித்த வலையில் விழுந்த ஈ ஒன்றைத் தாவிப் பிடித்தது சிலந்தி.

''ஐயோ! என்னைக் கொல்லாதே! எளியாரை வலியார் அடித்தால் வலியாரைத் தெய்வம் அடிக்கும்!'' என்று அலறியது ஈ.

''கவலைப்படாதே. அந்தத் தெய்வத்தைத்தான் இப்போது நீ பார்க்கப் போகிறாய்!'' என்று சொல்லிக் கொண்டே, சிலந்தி அதை விழுங்கி வைத்தது.

அடுத்த கணம் தன்னை யாரோ கவ்விப் பிடிப்பது போலிருக்கவே, ''யார் அது?'' என்று மிகுந்த கோபத்துடன் கேட்டது சிலந்தி.

''நான்தான் தெய்வம்!'' என்றது பல்லி.



இன்னும் பெரிய வசதிகள் கிடைக்கவில்லை. படம் வெளியானால் நிச்சயம் அவை வந்தடையும்.

தந்தை போன்ற முத்தையாவின் கால்களில் விழுந்து வணங்கினாள். கைகொடுத்த தெய்வமாயிற்றே !

''அம்மா, மைனாதேவி! என்னை நீ வணங்குவது ஒருபுறம் இருக்கட்டும். உனக்கு வாய்ப்பளித்தாரே சோணாசலம் பிள்ளை, அவருக்கு முதலில் மாலை மரியாதை செய்து வணங்கு. முறையும் அதுதான்!''

ஆனந்தக் கண்ணீர் கரை புரள முத்தையாவை நோக்கினாள் மைனாதேவி.

''நீங்களும் என்னுடன் வரவேண்டும்!''

முத்தையா கலகலவென்று நகைத்தார்.

''மைனா ! நான் எதற்கம்மா? அது கூடாது. மேலும் எனக்கு இன்று 'டூட்டி' இருக்கிறது. நீ போய் உன் கடமையைச் செய்து விட்டுத் திரும்பு.''

அன்னமிட்டு ஆதரித்த ராசம்மாளிடமும் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டாள் மைனாதேவி. நேரே பூக்கடைக்குச் சென்று கனத்து நீண்ட ரோஜா மாலையொன்றையும், பெரிய செண்டு ஒன்றையும் வாங்கிக்கொண்டு ஓர் ஐம்பது ரூபாய்க்குப் பழங்களை வாங்கிக் கூடையில் நிரப்பிக் கொண்டு பூவிருந்தவல்லி நெடுஞ்சாலை நோக்கி விரைந்தாள்.

பூவிருந்தவல்லிப் பெருஞ்சாலையில்தான் திருவாளர் சோணாசலம்பிள்ளையின் அரண்மனை போன்ற மாளிகை கம்பீரமாகக் காட்சி தந்து கொண்டிருந்தது.

மாளிகையினுள் நுழைந்து, நேரே தயாரிப்பாளர் தனியறை நாடிச் சென்று 'காலிங் பெல்லை' அழுத்த முனைந்தாள் மைனாதேவி. அப்போது உள்ளிருந்து காரசாரமான குரலொலிகள் கேட்டன. அக்குரல்களில் கதாநாயகியும், பிரபல நட்சத்திரமுமான ஸ்ரீமதி முல்லைவதனத்தின் குரலே மேலோங்கி ஒலித்தது. அதிலே ஒரு பிடிவாதமும், அழுத்தமும் இருந்தன. ஏன்? வேதனையும் இழையோடியது. அந்த வேதனை கக்கிய கடைசி வெடிச் சொற்கள் இவைதாம்: ''இனி உங்கள் கம்பெனிப் படம் ஒன்றிலும் நடிக்க மாட்டேன். இதுவே என் கடைசிப் படமாகும்!''

''முல்லை ! உன்னுடைய பிடிவாதம் அவ்வளவு சரியானதாக எனக்குத் தெரியவில்லை. நேற்று முளைத்தவள் மைனாதேவி. எத்தனையோ படங்களில் நடித்து நூறாவது நாள் விழாக்கள் பலவற்றைக் கண்டவள் நீ! இந்த மைனாதேவியால் உன் பெயர் கெட்டு விடும் என்பது நம்ப முடியாதது!'' — படாதிபர் சோணாசலம் பிள்ளைதான் தேற்றினார்.

''நம்புவீர்களோ, நம்ப மாட்டீர்களோ, அது எனக்குத் தெரியாது. நிச்சயம் என் மார்க்கெட் கெட்டு விடும் என்று நான் நம்புகிறேன். ஒன்று: அவள் நடித்த பகுதிகளையெல்லாம் வெட்டி எறிந்து விட்டு, நான் சொல்கிற நடிகையைப் போட்டு 'ரீ டேக்' எடுக்க வேண்டும். இல்லை, இத்துடன் என்னை 'எல்லாவற்றுக்குமாக'த் தலை முழுகிவிடுங்கள். இரண்டில் எது வேண்டுமோ அதை உடனடியாகத் தீர்மானம் செய்யுங்கள்.''

சோணாசலம்பிள்ளை சிந்திக்கவே இல்லை. சிந்திக்க என்ன இருக்கிறது? முல்லையை இழக்கப் பிள்ளைவாளுக்கென்ன பைத்தியமா? முத்தையாவாவது, சொத்தையாவாவது!

''மானேஜர்!'' பிள்ளைவாளின் குரல் ஓங்காரமாக ஒலித்தது.

பொறுப்பாளர் அலறிப் புடைத்துக் கொண்டு ஓடோடி வந்தார். அப்போது அறை வாசற்படியின் வெளியே மைனாதேவி மாலையும் கையுமாக நின்று ஒட்டுக் கேட்டதைக் கண்டு மருட்சி கண்டார்.

உள்ளே நுழைந்தார் பொறுப்பாளர்.

''மானேஜர்! உடனே நம்ம டைரக்டர் வீட்டுக்கு வண்டி எடுத்துக் கொண்டு புறப்படுங்கள். போய் மைனாதேவி நடித்த பாகத்தை யெல்லாம் எடிட்டிங் அறைக்குப் போய் வெட்டி எறியச் செய்யுங்கள். அப்படியே நடிகை நாகரத்தினம் வீட்டுக்குச் சென்று ஒரு 'காண்ட்ராக்ட்' போட்டு அழைத்து வாருங்கள் !''

பொறுப்பாளர் மேலும் மருண்டார்: ''சார்! மைனாதேவியம்மாள் வெளியில் நிற்கிறார்கள்.''

''ஓகோ! அப்படியா! நல்லதாப் போச்சு! நேரிலேயே சொல்லி விடுகிறேன். கூப்பிடுங்கள் !'' நெஞ்சில் கொஞ்சமும் ஈரமில்லாமல்தான் சொற்கள் வெளி வந்தன.

பொறுப்பாளர் மனம் வெருண்டு வெளியே வந்தார். வாசற்படியில் பூமாலையும், பழக்கூடையும் இருந்தனவே யொழிய மைனாதேவியைக் காணோம்.

சென்ட்ரல் புகைவண்டி நிலையத்தின் எதிரே போலீஸ்காரர் முத்தையா, போக்குவரத்துக்களைக் கட்டுப்படுத்திக் கொண்டு கருமமே கண்ணாக இருந்தார். நல்ல அலுவலக நேரம் அது. இமை கொட்டுவதற்கும் நேரமில்லை.

துரதிர்ஷ்டமே வாழ்வாகக் கொண்டு விட்டோம் என்ற மனவுடைப்புடன் தன்னை மறந்த வேகச் சுழிப்பில் — மயான நினைவில் முன்னம் எந்தக் கடற்கரையை நோக்கித் தற்கொலைக்காக நடந்தாளோ, அதே கடற்கரையை நோக்கி இப்போதும் நடந்து கொண்டிருந்தாள் மைனாதேவி. ஆனால், முன்னைவிட வேகம் இப்போது இரட்டிப்பாக இருந்தது.

பயிலாத பரத சேவை புரிந்து கொண்டிருந்த முத்தையாவின் கண்களில், தொலை தூரத்தில் நடந்தே சென்று கொண்டிருக்கும் மைனாதேவி பட்டு விட்டாள். மனத்தில் ஓர் ஐயம் பெரிதாக வலையமிட்டது. ஏதோ நடந்து விட்டது — அவளைப் பழைய சூழ் நிலைக்குக் கொண்டு வருமளவுக்கு ஏதோ நடந்து விட்டது. 'மைனா தேவி' என்று ஓங்கிக் குரல் விடுக்க முயன்றார் முத்தையா. மேலே அதிகாரிகள் வேறு இருக்கக் கண்டு குரலை விழுங்கி விட்டார். கடமை வேறு அந்த ஒரு கணத்தில் அவரை ஸ்தம்பிக்க வைத்து விட்டது. எதை எதையோ காட்டி நிறுத்தும் அவரால், கடலை நோக்கிச் செல்லும் மைனாதேவியை அப்போதைக்கு நிறுத்த முடியாமலேயே போய் விட்டது. விதிதான் அவளுக்குப் பச்சைவிளக்குக் காட்டிவிட்டதே!

---

அட்டைப்படக் கதை: சித்திரம்—கல்பனா.



தஞ்சாவூர் டாக்டர் என். ஆர். சுப்பிரமணியன் அவர்களின் குமாரத்தி சௌ. காஞ்சனாவுக்கும், ராவ்சாகிப் வி. துரைசாமி ஐயர் அவர்களின் புதல்வன் சிரஞ்சீவி டி. சங்கர் நாராயணனுக்கும் 7-2-65 அன்று தஞ்சாவூரில் திருமணம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. மணமக்களுக்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகளும், பரிசுப் பொருள்களும் வந்து குவிந்தன. மாலையில் நடந்த வரவேற்பில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசைக் கச்சேரிக்குத் திரளான ரஸிகப் பெருமக்கள் விஜயம் செய்து ரஸித்தனர்.

# கந்தன் கருணை

திரு முருக கிருபானந்த வாரியார்



## 18. சூராதியவுணர் தோற்றம்

கந்தபெருமானுக்கு வியாழபகவான் சூரன் முதலியோர் வரலாற்றைக் கூறத் தொடங்கிய கட்டத்துக்குத் திரும்புவோம்:

இது கந்தபுராணத்தின் மகேந்திர காண்டத்தைச் சேரும்.

பிறவிப் பெருங்கடலைத் தாண்டுமாறு அடியாருக்கு அருள்புரிவதற்காக முருகப் பெருமான் ''கயிலை மலையனைய செந்தில்'' என்று போற்றப்பட்ட திருச்செந்தூரில் கடற்கரையில் வீற்றிருந்தார்.

நவக்கிரகங்களிலே மேலாக மதிக்கப் படுபவர் வியாழ பகவான். அவரது பார்வை இரண்டாமிடத்தில் இருந்தால் வாக்கு செல்வாக்குடையதாயிருக்கும்; ஐந்தாமிடத்தில் இருந்தால் நல்ல மனம் அமையும்; ஏழாமிடத்தில் இருந்தால் மனைவி புனிதவதியாய் இருப்பாள். இவ்வளவு அருமை பெருமை மிக்க வியாழ பகவான் அசுரர்களின் கதையைச் சொல்வதற்கு முன்பு ஸ்தோத்திரம் செய்து கொள்கிருர்:

ஊரி லான்குணங் குறியிலான்
செயலிலான் உரைக்கும்
பேரி லானொரு முன்னிலான்
பின்னிலான் பிறந்தோர்
சாரி லான்வரல் போக்கிலான்
மேலி லான் தனக்கு
நேரி லான்உயிர்க் கடவுளாய்
என்னுளே நின்ருன்

அறுபத்தாறு கோடி அசுரர்களுக்கு அரசனுகிய அசுரேந்திரன் மங்கலகேசி என்னும் அரக்கியை மணந்து சுரசை என்னும் மகளைப் பெற்ருன். அவள் வளர்ந்தபின் அரச குருவாகிய சுக்கிரா

சாரியர் மாயையின் கல்விகள் அனைத்தையும் அவளுக்குக் கற்பித்தார். அந்தக் கல்வியில் அவள் கொண்ட திறமை காரணமாக அவளை மாயை என்றே அழைத்தனர்.

அசுரர்களின் சிறுமையையும், இந்திராதி தேவர்களின் பெருமையையும், தேவர்கள் இன்பம் இழந்து அசுரர்களால் துன்புறும்படி திருநந்தி தேவர் சபித்ததையும் எண்ணிய சுக்கிரன் மாயையை நோக்கி, ''மாயையே! திருமாலாலும் இந்திரனாலும் முனிவர்களாலும் கணக்கற்ற அசுரர்கள் அழிந்தார்கள். உன் தந்தையும் தன் வலி இழந்து ஒடுங்கினான். அசுர குலம் இனி உன்னால் வளர வேண்டும். நீ திருமகளும் நாணும் வனப்புடன்



சென்று காசிப முனிவரை மயக்கிப் புத்திரர்களைப் பெற்று, குல விருத்தி செய்து அசுரர் பலம் ஓங்கச் செய்வாயாக'' என்று பணித்தார்.

மாயை அதற்கு இசைந்து சுக்கிராசாரியரிடம் விடைபெற்று மேருகிரிக்கு வடக்கே தவம் செய்யும் வனத்தை வந்தடைந்தாள். அங்கு மாயை பூஞ்சோலைகளையும், மணல் மேடைகளையும், தாமரை ஓடைகளையும், கொடிப்பந்தர்களையும், மலர்ப் படுக்கைகளையும் உண்டாக்கினாள். காசிப முனிவர் அவற்றைக் கண்டு, 'தேவலோகம் இங்கு இறங்கி வந்ததோ? அல்லது அளகாபுரி இங்கு இறங்கி வந்ததோ?' என்று வியந்து, இவற்றை உண்டாக்கியவர் யாரோ என்று ஐயுற்றார். அப்போது மாயை ஓர் இரத்தினக் குன்றின் மேல் வான வில் போல் தோன்றினாள். அவளது பேரெழிலைக் கண்ட காசிப முனிவர் மையல் கொண்டார். அவள் அருகே சென்று, அவள் யாரென வினவினார்.

''முனிவரே! நீர் என்னிடம் தனித்து வந்து என் வரலாற்றை வினவி நிற்பது தகுதியன்று; தவம் செய்யப் போம்'' என்றாள் மாயை மாயாஜால நடிப்புடன்.

''மங்கையே! உன்னை அடைந்த பின் வேறெதற்குத் தவம் புரிய வேண்டும்?'' என்றார் காசிபர்.

காமவேகத்துக்கு ஆட்பட்டவர்கள் ஒரேயடியாக மனமிடிந்து விடாமல் ஆறுதல் செய்து கொண்டு தம்மைத் திருத்திக் கொள்ளவே இது போன்ற வரலாறுகள் உள்ளன. மகா முனிவர்களும் மதி மயங்கினர் என்பது நாம் ஒரேயடியாக மனம் ஒடிந்து விடாமல்

காக்கிறது. ஆனல் முனிவர்களின் வாழ்வில் இது போன்ற வேகம், தோன்றியது போலவே மறைந்தும் விடும். காசிபரின் காம வேகத்தை நாம் பரிகசிப்பதற்குத் தகுதியற்றவர். அவர் தவமும் விரதமும் இருந்தது போல் கோடியில் ஒரு பங்கு நம்மால் இருக்க இயலுமா? முனிவர்களின் ஞானத்தையும் இந்திரிய நிக்ரகத்தையும் போற்றி அவர்கள் தந்துள்ள மந்திரங்களைக் காப்பதே நமக்கு அழகே யன்றி, எப்போதேனும் அவர்களிடம் காணக்கூடிய நமக்குப் புரியாத செயல்களைக் கொண்டு இழுக்கு கற்பிக்கலாகாது.

''தவமுனிவரே! நான் உத்தர பூமியில் உள்ளவள். மேரு மலைக்குத் தெற்கே உள்ள கங்கையில் நீராடச் செல்லுகிறேன்; நீர் இங்கேயே நில்லும்'' என்ருள் மாயை.

''பெண்ணே! கங்கை முதலிய நதிகள் ஏழையும், சிவ விஷ்ணு ஸ்தலங்கள் யாவற்றையும், பொன்னுலகம் முதலிய தேவர் உலகங்களையும், ஆங்காங்குள்ள தேவர்களையும், இமைப்பொழுதில் இங்கே வரவழைப்பேன். நீ காண விரும்பினல் மும்மூர்த்திகளையும், மூவுலகிலுள்ளோரையும் இங்கு வரவழைப்பேன்; தேவாமிர்தம் கேட்டாலும் வரவழைப்பேன்; அரம்பையர் முதலிய மகளிர் வந்து உனக்கு ஏவல் செய்யச் செய்வேன்; என் மையலைத் தணிப்பாய்'' என்ருர் காசிபர்.

''பெரியவரே! நான் தனித்திருப்பதால்தானே இவ்வாறெல்லாம் பேசினீர்கள்? இனி இவ்வாறு பேசுவதை விட்டு, இங்கேயே நில்லும்'' என்று நடிப்பாகக் கூறி கங்கையை நோக்கிச் செல்வதுபோல் சென்று மறைந்தாள் மாயை. காசிபர் அவளை எவ்விடத்துத் தேடியும் காணமல் மிகவும் துன்புற்றுப் புலம்பினர்.

கதிரவன் மேற்கடலில் மூழ்கினன். காசிபர் காம நோயால் மிகவும் கலங்கினர். அவர் நோக்கிய இடமெல்லாம் மாயையின் தோற்றத்தையே கண்டார். ஆம், உள் பார்வைக்கு அன்றிக் கண் பார்வைக்கு அகப்படுவன எல்லாமே மாயைதானே?

கிழ்த் திசையில் சந்திரன் தோன்றியதும் தாமரை குவிந்தது; அல்லி மலர்ந்தது. காசிப முனிவர் மாயையை நினைந்து துன்புற்ருர்.

மீண்டும் அவருக்கு முன்னே தோன்றினள் மாயை. கருத்தழிந்து நின்ற காசிபர், மாயையைக் கண்டு மகிழ்ந்தார். அவள் முன்னே சென்று, ''என்னை ஆட்கொள்'' என்று வேண்டி நின்ருர்.

''மாதவரே! என்னுடைய பேரழகுக்கேற்ற வடிவத்தை இப்போது எடுத்துக் கொள்ளுங்கள். பின்னர் நான் எடுக்கும் ஒவ்வொரு வடிவத்துக்கும் ஏற்ற வடிவத்தை நீர் எடுத்துக் கொண்டால் நான் உம்மைக் கூடுவேன்'' என்ருள் மாயை.

காசிப முனிவர் அழகு மிகுந்த ஒரு தேவ வடிவம் கொண்டார். அந்த வடிவத்தைக் கண்டு மயங்கிய மாயை, புன்னகை பூத்து அவருடைய கரம் பற்றினள். அங்குள்ள மணி மண்டபத்தினுள் புகுந்து, தன் ஆணையால் உண்டாக்கிய அழகிய சயனத்தின் மீது அமர்ந்து கொண்டாள். காசிபர் அவளை அடைந்தார். சூரியன் அஸ்தமித்த முதல் யாமத்தில் சூரபன்மன் தோன்றினன். மாயை-காசிபர் ஆகியோரின் வேர்வையில் முப்பதினயிரம் வெள்ளம் அசுரர்கள் தோன்றினர்கள். அவர்களை அவ்விடத்திலேயே விட்டு விட்டு மாயை காசிப முனிவரோடு வேறிடம் சென்ருள். இரண்டாம் யாமத்தில் இருவரும் சிங்க வடிவம் கொண்டனர். அப்பொழுது ஆயிரம் சிங்க முகங்களும், இரண்டாயிரம் கரங்களுமுடைய சிங்கமுகாசுரன் பிறந்தான். சிம்ம தம்பதியின் வேர்வையினின்றும் சிங்கமுகத்துடன் நாற்பதினயிரம் வெள்ளம் அசுரர்கள் தோன்றினர்கள். பின்னர், யானை, ஆடு, யாளி, புலி, குதிரை, மான், பசு, கரடி, பன்றி, கூளி முதலிய வடிவங்களை விடியற்காலை வரை எடுத்தார்கள்; பல்லாயிரக் கணக்கான அசுரர்களைப் பெற்ருர்கள். அப்போது திக்குறிகள் தோன்றின.

இரவு நீங்கியது; கதிரவன் உதித்தான். மாயையும், காசிப முனிவரும் முன்னை வடிவம் கொண்டு சூரன் முதலிய மக்களையும், இரண்டு இலட்சம் அசுரர்களையும் கண்டு மகிழ்ந்தனர்.

நாம் எதை எதையோ அறம் என்று கருதி, கருதியதை அருளுமாறு இறைவனிடம் வேண்டுகிருேம். அறத்திலெல்லாம் தலையாய அறம் சற்புத்திரனைப் பெறுவதாகும். குந்தி பிள்ளை பெற்றதைக் கண்டு காந்தாரி பொருமைப் பட்டதால் அவளுடைய பிள்ளைகள் பொருமை மிக்கவர்களாக இருந்தார்கள்.

**அற்றனள் துயரம் என்றே**
**அருந்தவப் பயனல் குந்தி**
**பெற்றனள் மைந்தன்! அந்தப்**
**பேருரை கேட்ட அன்றே**
**உற்றனள் பொருமை....**

என்று கூறுகிருர் வில்லிப்புத்தூரார்.

''கொச்சை மக்களைப் பெறுதலின்

# ஸ்டாண்டர்ட் ஹெரால்ட்

## கார் சவாரியில்
## ஒரு புது அனுபவம்



### கீழ்க்கண்ட போற்றத்தக்க
### வசதிகளுடன் கூடியது

- 25 அடி வட்டத்திற்குள் திருப்ப முடியும்
- ஒவ்வொரு சக்கரத்திற்கும் தனித்தனி சஸ்பென்ஷன் (Suspension) இணைப்பு இருக்கிறது (சுலபமாக அபாயமின்றி திருப்பலாம். ரஸ்தாவில் நல்ல பிடிப்பு உண்டு. முன் சக்கரத்திற்கு ஏற்படும் அதிர்ச்சி முன் சக்கரத்தின் ஸ்ப்ரிங்கினுலேயே தாங்கிக்கொள்ளப்படுவதால், வண்டியின் பின்புறம் அதிர்ச்சியோ, ஆட்டமோ அடையாது.)
- ஃகு கர்டரினுலான சாஸிஸ் (Chassis) (மிக உறுதியான கார் அமைப்பு)
- 93% வெளிப்பார்வை வசதி.

**STANDARD herald**

# ஸ்டாண்டர்ட் ஹெரால்ட்

### உறுதியான, *எழில் மிகுந்த* கார்




தயாரிப்பாளர்கள் :

ஸ்டாண்டர்ட் மோட்டார் ப்ராடக்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்

சென்னை. 2

விநியோகஸ்தர்கள் :

யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்) பிரைவேட் லிமிடெட்

சென்னை உதகை

யுனிகான் (பெங்களூர்) பிரைவேட் லிமிடெட், பெங்களூர்

ஒரு கிளாஸ்

# கிஸான்

ஸ்க்வாஷ் அருந்தி

இளைப்பாறுங்கள்

அது சிறந்ததொரு
பழ ரசமாகும்




சுவை மிக்கது; அலுப்பு நீக்குவது; ஆரோக்கியமானது. தானே கனிந்த கனிகளிலிருந்து தயாரானது. வைட்டமின் சத்து நிறைந்தது. கிஸான் ஸ்க்வாஷ் ஆரஞ்சு, லெமன், மற்றும் ஆறு ரகங்களில் கிடைக்கிறது.

மற்ற எந்தத்
தயாரிப்பையும் விட
கிஸான் ஸ்க்வாஷ்கள்தான்
இந்தியாவில் அதிகமாக
விற்பனையாகின்றன

கிஸான் பிராடக்ட்ஸ் லிமிடெட், பெங்களூர்

அக்குடி எச்சம் அற்று ஏமாந்து இருக்கை நன்றே'' என்று கூறினர் பெரியோர்.

இவ்வாறிருக்க வேதங்களின் உரு வான காசிப முனிவருக்கு அசுரர்கள் பிறந்தனர் என்பது விந்தையாகத் தானே உள்ளது! காமம் என்ற பொல் லாத வியாதி அவரைப் பற்றியதன் பலனாகவே இவ்வாறு நேர்ந்தது. மாயை யிடம் தம்மால் எவ்வளவோ அற்புதங் களைச் சாதிக்க முடியும் என அவர் கூறினார். ஆனாலும் காமத்தின் தீய பலனை அவராலும் மாற்ற முடியவில்லை!

சூரபன்மனும், சிங்கமுகனும், தாரக னும் தாய் தந்தையர்களைத் தொழுது, ''நாங்கள் செய்வது யாது? சொல் லுங்கள்'' என்று கேட்டார்கள்.

காசிப முனிவர், சூரபன்மன் முத லான தமது பிள்ளைகளுக்கு ஞானோப தேசம் செய்தார்.

மனம் ஓடுகிறபடி ஓடட்டும் என்று முதலில் விட்டுப் பிடித்ததால் அசுரரைப் பெற்றார். பிறகு தமது இயல்பான ஞானத்தில் நின்று புத்திரர்களுக்கும் ஞானம் புகட்ட முயன்றார்.

''பெரியோர்கள் ஆராய வேண்டிய பொருள்கள் மூன்று. அவை பதி, பசு, பாசம் எனப்படும். ஐந்தொழிற் கும் அதிபராகிய சிவபெருமானே பதி யெனப்படுவர். பிறப்பு, இறப்பு என்னும் வலையுட்பட்டு உழலும் உயிர்களாகிய நாம் பசுக்கள். ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங் களே பாசம். இவ்வாறு வேதம் கூறு கிறது. பாசமாகிய இத்தளையிலிருந்து உயிர்கள் விடுபட்டுப் பதியைச் சென் றடைவதே கடமையாகும்.

**''சான்றவர் ஆய்ந்திடத்**
**தக்கவாம் பொருள்**
**மூன்றன மறையெலாம்**
**மொழிய நின்றன**
**ஆன்றதோர் தொல்பதி**
**ஆருயிர்த் தொகை**
**வான்றிகழ் தளையென**
**வகுப்பர் அன்னவே''**

''பாசத்தாற் கட்டுண்ட பசுக் களுக்கு உறுதியைத் தருவது அறமே யாகும். கல்வி, செல்வம், வீரம் முத லியவை நிலையற்றவை. அறம் செய் தால் அன்பும் அருளும் உண்டாகும்; அவை உண்டாகத் தவம் உண்டாகும். தவம் உண்டாயின் உயிர், சிவத்தைச் சார்ந்து பிறவித் துன்பம் நீங்கி இன்புறும். தவத்திற் சிறந்த பொருள் மூவுலகங்களிலும் இல்லை. தவம்செய்தே பிரம்ம விஷ்ணுக்கள் மேற்பதவி யடைந்தனர். தவம் செய்த மார்க் கண்டேயர் மறலியை வென்றார்''



என்று கூறி மார்க்கண்டேயர் சரி தத்தை மொழிந்தார் காசிபர்.

மிருகண்டு முனிவர் தவம் செய்து பெற்ற புதல்வனே மார்க்கண்டேயன். நீண்ட ஆயுள் கொண்ட கொடிய நூறு புதல்வரை வேண்டாம் என்று மறுத்து விட்டு, பதினாறு வயதையே கொண்ட சற்புத்திரன் ஒருவன் போதும் என்று வரம் பெற்றார் மிருகண்டு. (இந்தக் கதையை இரண்டு லட்சம் அசுரரைப் பிறப்பித்த காசிபரே கூறினார் என்பதிலிருந்து முனிவரின் நடுநிலைமை தெரிகிறதல்லவா?) அந்த சற்புத்திரரே மார்க்கண்டேயன். இளமை முதலே சிவ பெருமானிடம் குன்றாத அன்பு கொண்டு பூசித்துப் பரம பக்தனானான் மார்க்கண் டேயன். அவன் ஆயுள் முடிந்ததும் யம தூதர் அவனைப் பற்ற வந்தார்கள். தவத் தின் ஒளியாகிச் சுடர் வீசிய மார்க் கண்டேயனை நெருங்க முடியாமல் யம தூதர்கள் திரும்பினர். யம னுடைய அமைச்சனாகிய காலனே நேரில் வந்து, மார்க்கண்டேயனைப் பற்றப் பயந்து, தன்னுடன் வந்து விடும்படி பணிவாக வேண்டுகோள் விடுத்தான். மார்க்கண்டேயன் அதற்கு இணங்க வில்லை. பின்னர் யமனே வர, மார்க்கண்டேயன் தான் பூஜிக்கும் சிவமூர்த்தத்தைப் பற்றிக் கொண்டான். புண்ணியம் மிகுந்தவர்க்கு ஆயுள் முடிந்தாலும், அவரைப் பற்றும் உரிமை

யமனுக்கு இல்லை. ஆனால் அதிகார போதையில் ஆணை எல்லை மறந்து விடு மல்லவா? யமன் பாசத்தை வீசினான். பாசமறுக்கும் பசுபதி லிங்கத்தினின்று உற்பவித்துக் காலனைக்காலால் உதைத்து மாய்த்துப் பாலனைக் காத்தருளினார்.

''சிவனடியார்கள் யமனையோ பிற தேவரையோ எண்ணி அஞ்சத் தேவை யில்லை. மார்க்கண்டேயனை யமனிட மிருந்து காப்பாற்றியது போல், தன்னை யும் யமன் வருங்கால் ''நம்மன்பன்'' என்று கூறிட வருமாறு இறைவனை வேண்டுவோம். மார்க்கண்டேயனை வழி காட்டியாகக் கொண்டு இறைவன் திருவடிகளை உறுதியாகப் பற்றிக் கொள்ள வேண்டும்'' என்றார் காசிபர்.

''தவத்தைச் செய்து சிவத்தை அடையுங்கள்'' என்று காசிபர் கூறிய தைக் கேட்ட மாயை நகைத்தாள். ''முனிவரே! முத்தியடைய விரும்பும் முனிவர்களுக்கல்லாமல் நாம் பெற்ற சிறுவர்களுக்குத் தவத்தைப் பற்றிச் சொல்லலாமா? இவர்கள் பெருஞ் செல்வத்தையும், வெற்றியையும், அழி வில்லாத ஆயுளையும், புகழையும் அடைய வேண்டும். அவற்றை யெல்லாம் இவர்கள் விரைவில் பெறுவதற்கு வழி காட்டுங்கள்'' என்று கூறினாள்.

''மாயை! உன் கருத்து இது என்றால், நீயே அதனை அவர்களுக்குச் சொல்லுவாய்'' என்றார் காசிபர்.

மாயை தன் புதல்வர்களை நோக்கிக் கூறலுற்றாள்.

''பிறவியால் உயிர்கள் அடையும் பயன் கல்வியும் செல்வமும் ஆகும். இவற்றுள் ஏதேனும் ஒன்றை அடை யாத பிறப்பு பேய்ப் பிறப்பாகும். கல்வி, செல்வம் என்னும் இரண்டில் செல்வமே சிறப்புடையது. கல்வி யுடையவர்களும் செல்வத்தை விரும்பிச் செல்வரைப் பணிந்து நிற்பர். கலைகள் எல்லாம் கற்றவர் வறுமை அடைந் தால், செல்வம் வேண்டித் தம் பகை வரையும் பணிந்து நிற்பர்.

''செல்வம் இல்லாதவன் உயிரற்ற உடம்புக்கு நிகராவான். செல்வம் முயற்சியால் வரும். நீங்கள் பெரு முயற்சி செய்து ஒருவராலும் பெறுதற் கரிய பெருஞ் செல்வத்தையும் தலைமை யையும் பெறவேண்டும். அதற்காக வேள்வி செய்ய வேண்டும். இத்திசை ஆலந்தீவு எனப்படும். இதற்கு நேரே வடக்கிலுள்ள பூமி அசுரர்கள் தவம் செய்வதற்கு ஏற்றது. நீங்கள் பரிசனங் களுடன் அங்கு சென்று வேள்வி செய்வதற்குக் குண்டங்களைச் செய்து நச்சுச் சமித்துக்களையிட்டு, மாமிசம், உதிரம் முதலியவற்றை இட்டு,' சிவ பெருமானை நோக்கி வீர வேள்வி செய்யுங்கள். அவர் தோன்றித் திரு வருள் புரிந்து வேண்டியவற்றையெல் லாம் தருவார்.

''வேள்விக்குப் புறப்படுங்கள். நீங்கள் அங்கு போனதும் வேள்விக்கு வேண் டியவற்றை யெல்லாம் நான் தருகி றேன்'' என்று கூறி சூரன் முதலிய மூவர்க்கும் வேள்வி செய்யும் விதியை யும் அதற்குரிய மந்திரங்களையும் உப தேசித்தாள். சூரபன்மன் தம் தம்பிய ருடன் தாய் தந்தையரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு உத்தர பூமிக்குப் புறப்பட்டுச் சென்றான்.

அவர்கள் சென்றதும் மாயை, தன் அருகிலிருந்த காசிபரை நோக்கி, ''புதல்வர்களைக் காப்பாற்றும் பொருட்டு நான் போகிறேன். நீங்கள் கவலைப்படாமல் இருங்கள்'' என்று கூறிப் புறப்பட்டாள்.

காசிபர் அவளைப் பின்தொடர்ந்து சென்றார். ''முனிவரே! மக்களைப் பெறுவதற்காகவே நான் இங்கு வந் தேன். மேலும் நான் மாயை. என் பிரிவால் நீங்கள் வருந்த வேண்டாம்'' என்று சொல்லி மறைந்தாள். ஞானம் மாயையிடம் பேச வேண்டிய பேச்சை மாயை ஞானத்திடம் பேசிற்று!

மாயையின் பிரிவால் காசிபர் மதி மயங்கி, ஏங்கினார். அப்போது பிரமன் தமது புதல்வராகிய காசிபர் முன் தோன்றி, ''மகனே! வேதம்ஓதியுணர்ந்த நீ ஒரு பெண் மீது மையல் கொண்டு வருந்தலாமா?'' என்று வினவினார்.

**''உள்ளினும் சுட்டிடும்**
**உணருங் கேள்வியில்**
**கொள்ளினும் சுட்டிடும்**
**குறுகி மற்றதைத்**
**தள்ளினுஞ் சுட்டிடும்**
**தன்மை ஈதினால்**
**கள்ளினும் கொடியது**
**காமத் தீயதே**

''மகனே! காமத்தை ஒழித்தவன் தான் முத்தி இன்பம் பெற முடியும். காமம் நரகத்துக்கு வழிகாட்டி; மனித னின் பெரும் பகை. மேலும் நீ எந்தப் பெண் மீது மையல் கொண்டிருக் கிறாயோ, அந்தப் பெண் வஞ்சனையே வடிவானவள்; மாயை. அவளுடன் கூடிய நீ பெரும் தீமை புரிந்து விட் டாய். நீ செய்த அந்தத் தீமை நீங்குவ தற்காகத் தவம் செய்'' என்று பிரம தேவர் கூறினார்.

அறிவு தெளிந்த காசிபர் காமம் நீங்கி, காமனைக் கடிந்த சிவபெருமானை நோக்கித்தவம்செய்யலானார். **(தொடரும்)**



# ஜீவிதம்

அத்தியாயம் பத்து

நச்சினார்க்கினியன்

பயில்வான் தம்பையா கன்னியம்மாவின் கதையைத் தொடர்ந்து கூறினான். ''கன்னிம்மா தந்தை வேலாண்டி நாய்க்கன் திடீர்னு செத்துப் போயிட்டான். ஆத்தாக்காரிக்கோ கண்ணு மங்கிப் போச்சு. கண்ணாலம் கட்டிக் கொடுக்க வேண்டிய பருவப் பொண்ணை வைச்சுக்கிட்டு அவள் படாத பாடு பட்டாள். வவுறு ஒண்ணு இருக்குதே ; எத்தினி நாள் பட்டினி கெடக்க முடியும்? உத்தார் ஊரார் பேசுவாங்களேன்னுகூடப் பார்க்காம, வேப்பரியிலே ஒரு பரங்கிக்காரி வீட்டிலே போய் வேலைசெய்ய ஆரம்பிச்சாள் கன்னிம்மா. சம்பளம் ஐஞ்சு ரூபாய். அந்தக் காலத்திலே அது பெரிய வருமானம். முதல்லே அவளுக்கு அந்த வேலை பிடிக்கலே தான். அப்புறம் துரைசாணியம்மா கொடுக்கிற ரொட்டித் துண்டும், ஸ்டு—கறிக் குழம்பும் அவளை அங்கே நிலைக்கப் பண்ணிடுச்சு....'' என்று தலை தொங்கித் துவளப் பேச்சை நிறுத்தியவன், ''ஏண்டா, நாயர்! இப்ப நான் இன்னா சொன்னேன்?'' என்று குழறிக் கேட்டான்.

''....ரொட்டித் துண்டும் கறிக் குழம்பும் அவளை அங்கே நிலைக்கப் பண்ணிடுச்சு!.... ம்.... அப்புறம்?'' என்று கேலியாகக் கூறிப் பேச்சை எடுத்துக் கொடுத்தான் நாயர்.

தம்பையாவிடம் இப்போது அத்தனை உற்சாகம் தென்படவில்லை. ஏதோ ஒரு கொடிய வேதனையால் உள்ளம் நொந்து நைகிறவன்போல் முகத்தைச் சுளித்து உடம்பை நெளித்த அவன் சலிப்படைந்த குரலில் மீண்டும் பேச ஆரம்பித்தான்:

''இப்படி அவளோட நாட்கள் ஓடிக்கிட்டு இருந்துச்சா?.... அப்போ பட்டணத்திலே இருந்த பரங்கிக்காரங்களுக்கெல்லாம் — அதான், ஆங்கிலோ இந்தியருங்க — படுகுஷியான காலம்.

ஜெகசிற்பியன்



நல்ல உழைப்பாளிங்க. ஜாலிப் பேர்வழிங்க. கள்ளங் கவடு கிடையாது. யார் மேலேயும் பொறாமைப்பட மாட்டாங்க. ஆனால் வெள்ளைக்காரன் கொடி பறந்ததாலே கொஞ்சம் அளவுக்கு மீறித் தெனாவட்டா இருந்தாங்க. நம்பளையெல்லாம் கண்டா அவுங்களுக்கு இளப்பம். 'இன்னா மேன், கத்திரிக்கா பர்ப்புக் கோய்ம்பா?'ன்னு சத்தாய்ப்பாங்க. மிலிட்ரி துட்டெல்லாம் அவங்ககிட்டேதான். கேக்கணுமா? நம்ம கன்னிம்மா கொழுகொழுன்னு ஆனாள்!.... ஆனாளா? அவள் வேலை செய்த பரங்கிக்காரன் வீட்டுக்கு ஒரு காப்பிரி சோல்ஜர் — அதான், நீக்ரோ என்பாங்களே அந்தச் சாதிக்காரன் — அடிக்கடி வந்து போய்க்



கிட்டிருந்தான். அவனும் அந்த வீட்டுக்காரத் துரையும் தோஸ்துகள். வருகிறதுக்கு இன்னு தடை? அவன் வந்தால் அந்த வீட்டிலே ஒரே பாட்டுத்தான், டான்சுதான், பார்ட்டிதான்! இப்படி இருந்தப்போ ஒரு நாள் துரையும் துரைசாணியும் வெளியே டான்சுக்குப் போயிட்டாங்க. வீட்டிலே யாருமில்லே. கன்னீம்மா ஒருத்திதான் புறாவுங்களுக்குத் தீனி போட்டுக்கிட்டு இருந்தாள். அந்த வீட்டுத் துரை ஒரு புறாப் பந்தய ஷோக்கனும். அதனுலே அவன் கிட்டே நல்ல நல்ல சாதிப் புறாவெல்லாம் இருந்துச்சாம். கன்னீம்மா வயசுப் பொண்ணு இல்லேயா? புறாவுங்களுக்குத் தீனி இறைச்சுக்கிட்டே அதுகளோடு விளையாடிக்கிட்டு இருந்திருக்கிறள். இந்தச் சமயம் அந்த நீக்ரோ சிப்பாய் வந்தான். அப்போ அவன் 'தண்ணி' மேலே இருந்திருக்கிறன்...'' என்று சொல்லும்போது ஒரு சிரிப்புச் சிரித்துக் கொண்டவன் மேலும் தொடர்ந்தான்:

''இந்தக் கயிலாத்துப் பொண்ணு ஒரு ரெண்டாங்கெட்டாள்; ஈசமாசை தெரியாதவள். அவன்கிட்டே போய் நெளிஞ்சு குழைஞ்சு பல்லேக் காட்டித் தனக்குத் தெரிஞ்ச பட்லர் இங்கிலீஷிலே பேசியிருக்கிறள். இன்னு பேசினுள்? 'தொரையும் தொரைசாணியும் டான்சுக்குப் போயிருக்கிறங்க; நான் மட்டும்தான் இருக்கிறேன்' — அப்படீன்னு சொல்லியிருக்கிறள். இந்தப் பேச்சு அந்தக் காப்பிரிக்கு எப்படி இருந்துச்சோ, இன்னன்னு புரிஞ்சுக்கிட்டானே? தப்பா நடந்துட்டான்! அவன் மிலிட்ரிக்காரன்; அதிலும் காப்பிரி. அவனே யாரு இன்னு பண்ண முடியும்? போயிட்டான். அவனுடை காம்ப்பே இந்த ஊரை விட்டுப் போயிடுச்சு......'' என்று பேச்சை நிறுத்திய தம்பையா, ''ஏன்டா, நாயர்! இப்ப நான் இன்னு சொன்னேன்?'' எனக் கேட்டவாறு தொங்கித் துவண்ட தலையை நிமிர்த்த முயன்றான்.

''அந்த நீக்ரோ ஜவான் ஊரை விட்டே போயிட்டான்.....! ம்.... அப்புறம்?'' என்று உற்சாகமாகப் பேச்சை எடுத்துக் கொடுத்தான் நாயர்.

''ஆமாம்; அவன் போயிட்டானு? அப்புறம்தான் பொண்ணுக்குப் புரிஞ்சது! புரிஞ்சு இன்னு பண்றது? மூழுவாம நின்னுட்டாளே! ஆத்தாக்காரி 'லபோ, திபோ'ன்னு வாயிலேயும் வவுத்திலேயும் அடிச்சிக்கிட்டு அழுதாள். அக்கம் பக்கம் காறித் துப்புமேன்னு பொண்ணே வீட்டோடு நிறுத்திக்கிட்டாள். தெரு மேலே தலை காட்ட விடறதில்லே. இது இன்னு மூடி வைக்கிற விஷயமா? பத்தாம் மாசம் கன்னீம்மா எங்கோ ஒரு கார்ப்பொரேசன் ஆசுபத்திரியிலே போய்க் குளிகுளிச்சாள். ஆம்பிளேப் புள்ளே. அப்பனே அப்படியே உரிச்சு எடுத்துக்கிட்டு வந்திருச்சு. கன்னீம்மாவுக்கு ஒரே அவமானம். ஆசுபத்திரி நர்சுங்களெல்லாம் கேலி பண்ணியிருக்கிறங்க. அஞ்சாம்நாள் வீட்டுக்கும் அனுப்பி வைச்சுட்டாங்க. காப்பிரிப் புள்ளேயை எடுத்துக்கிட்டுக் குடியிருக்கிற பேட்டையிலே காலே வைக்க அவளுக்குப் பயமாயிடுச்சு. பன்னுடைக்கு முதலிலேயே இந்தப் புத்தி இருக்கணும். இன்னு பண்றது? அவள் யோசிச்சு யோசிச்சுப் பார்த்தாள். கடைசியிலே துணிஞ்சிட்டாள். — ஆமாண்டா, நாயர்! அதோ தெரியுதே அந்த வேப்ப மரத்துக்குப் பக்கத்திலே அப்போ ஒரு ஏர். ஆர். பி. ஷெல்டர் இருந்துச்சு. அந்த ஷெல்டரண்டை ராத்திரியோடு ராத்திரியா குழந்தையைக் கொண்டாந்து போட்டுப்பிட்டு ஓடிப் போயிட்டாள்!... இங்கேதான் ஆண்டவன் லீலேயைப் பார்க்கணும். என்னங்கடா, நான் சொல்றதைக் கேட்கிறீங்களா?....''

சுற்றி நின்றவர்களே வெறித்துப் பார்த்த தம்பையா பேச்சைத் தொடர்ந்தான்: ''அன்னேக்கென்கிற தினம் நான் வண்ணுரப் பேட்டைக்குப் போய் நம்ம குருகிட்டே பாடம் கத்துக்கிட்டு, ராத்திரி பன்னெண்டு மணி வாக்கிலே இந்தப் பக்கம் ஒண்டியா வந்துக்கிட்டு இருந்தேன். திடீர்னு குழந்தை அழுகிற சத்தம் கேட்டுச்சு. சுத்துமுத்தும் பார்த்தேன். பலான இடத்திலே, பாவம் பச்சை சிசு 'வீறு வீறு'ன்னு கத்திக்கிட்டு இருந்திச்சு. விட்டுட்டுப்போக மனசு வருமா? ஆகிறது ஆகட்டும்னு குழந்தையைத் தூக்கிக்கிட்டு வீட்டுக்குப் போயிட்டேன். இப்பப் போலத்தான் அப்பவும் நான் ஒண்டிக்கட்டை. நம்ம சிஷ்யப் பிள்ளேகளே அனுப்பிப் பால் வாங்கியாறச் சொல்லி, அனில் பிள்ளேக்கு ஊட்ருப்பலே ஊட்டினேன். மூணு நாள் படா தமாஷா இருந்துச்சு. ஒரு தபா என்னுடை 'சரக்கை' அதுக்கும் கொஞ்சம் ஊத்திப்பிட்டேன். அன்னேக்கெல்லாம் குழந்தை கண்ணேத் திறக்கல்லே; நல்ல தூக்கம்! நாலாம் நாளுதான் பேஜார் ஆரம்பமாச்சு. குழந்தை கையிலே காலிலே தங்காமல் ஒரே காட்டுக் கூச்சலாப் போட்டுச்சு.

அதை வைச்சுக்கிட்டு ராத்திரியெல்லாம் படாத பாடுபட்டேன். கன்னிம்மா விடு பக்கத்திலேதானே? அவனுக்குத் தன் புள்ளேதான்னு தெரிஞ்சு போச்சு. அது கத்தற கத்தலே அவளால் கேட்கச் சகிக்க முடியலே. என்ன இருந்தாலும் பெத்த மனம் இல்லேயா? விடியக் காலம்பற வந்து என் வீட்டுக் கதவைத் தட்டினுள். திறந்தேன். கண்ணிலே மாலே மாலேயாய்த் தண்ணியை வடிச்சுக் கிட்டு. 'அது என் பிள்ளேதான்'னு நிசத்தைச் சொல்லிப்பிட்டாள். ஆங்.... அப்போ எனக்கு வந்துச்சே ஒரு கோவம்; எழுந்து போய் அவனே விளாசு விளா சுன்னு விளாசிப்பிட்டேன் பெல்ட் டாலே! அந்த அடியை, இதோ இருக் கிறுனே டூப்ளிகேட் கித்தேரி முத்து, இவன் வாங்கி யிருந்தால் அங்கேயே கோழிக் குஞ்சு மாதிரி சுருண்டு விழுந் துட்டிருப்பான்!'' என்று பேச்சு தடு மாறிய நிலேயில் நிறுத்திய தம்பையா, ''ஏண்டா, நாயர்! இப்ப நான் இன்னு சொன்னேன்?'' என்று அழுவது போன்ற குரலில் கேட்டான்.

பாய்லரில் வெந்நீர் கொதித்துப் பொங்குவதைக்கூடக் கவனியாமல், கதையிலே லயித்துப் போயிருந்த மாதவன் நாயர், ''கோழிக் குஞ்சு மாதிரி சுருண்டு விழுந்து விட்டிருப் பான்!..... ம்... அப்புறம்?'' என்று அவசரமாக விளித்தான்.

''அப்புறம் இன்னுடா? கன்னிம்மா வுக்கு ஒரு பக்கம் குழந்தைப் பாசம்; இன்னொரு பக்கம் ஊரார் பயம். கெடந்து தவியாய்த் தவிச்சாள். எனக்கு ரொம்பப் பரிதாபமாப் போயிடுச்சு. பொழைச்சுப் போருள் கழுதைன்னு ஒரு யோசனே சொன் னேன்: 'தினமும் நேரப்படி அவள் என் வீட்டுக்கு வந்து குழந்தைக்குப் பால் ஊட்டிப்பிட்டுப் போயிட வேண் டியது; மத்ததை நான் கவனிச்சுக்க றேன்'னு கண்டிஷன் போட்டேன். அவளுக்கு ரொம்ப சந்தோஷம். தினத் துக்கு ஆறு வேளே தவருமல் ஓடியாந்து குழந்தைக்குப் பால் கொடுத்துட்டுச் சந்தடி காட்டாமப் போயிடுவாள். ரெண்டு மாசம் இப்படி நடந்துச்சு!... ஆமாம்; இந்த ஊரைப் பத்தி நீ இன்னு நாயர் நினேக்கிறே?.... 'இதெல்லாம் பேஜார் புடிச்ச கேள்வி; பதில் சொன்னு கன்ருவியா யிருக்கும்'னு சொல்றியா?.. சரி; அந்தப் பொண்ணு கன்னிம்மா அக்குத் தொக்கு இல்லாதவள், நானும் தனிக் கட்டை; கேட்சணுமா? அவள் அடிக்கொருவாட்டி என் வீட்டுக்கு வந்து போறதைப் பார்த்த அக்கம்பக்கத்து சனங்கள் ஏதேதோ பட்டங் கட்டிப் பேச ஆரம்பிச்சாங்க. நான்தான் 'டோன்ட்கேர்' மாஸ்டராச்சே! எதை யும் சட்டை பண்ணிக்கலே. எவனுவது மீறி வந்து கேட்டால் ஒரு 'நாக்—அவுட்' கொடுத்து அனுப்பலாம்னு இருந் தேன். ஆனுல் அந்தப் பொண்ணு பயந்துட்டாள். தனக்காக இல்லே, எனக்காக! 'எந்தத் தொட்டுத்தொடுக் கும் இல்லாம, பாவம் அவர் மேலே எதுக்கு வீண் பழி'ன்னு நினேச்சுக் குழந்தையைத் தன் வீட்டுக்கே தூக் கிக்கிட்டுப் போயிட்டாள். அப்புறம் அதைக் காப்பாத்த அவள் பட்ட பாடும், ஊர் சனங்களாலே அவள் அநுபவிச்ச கஸ்திநஸ்திகளும் — போங் கடா, அதையெல்லாம் வாய்விட்டுச் சொல்ல முடியாது! நான்தான் அவ ளுக்கு ஒரு எருமை மாடு வாங்கிக் கொடுத்து வயித்துப்பாட்டுக்கு வழி செஞ்சேன். அந்த மாட்டை வைச்சுக் கிட்டு அவளும் ரொம்பத் தளுக்கா காலத்தை ஓட்டிக் குழந்தைப் புள்ளே யையும் வளர்த்து ஆளாக்கி விட் டாள். அந்தச் சோமாறிப் பையன்தான் இப்போ அவளே வாரத்துக்கு ஒருநாள் கூடப் போய்ப் பார்க்காமல் இப்படி அழ வைச்சு வேடிக்கை காட்டிக்கிட்டு இருக்கிருன்...'' — தம்பையாவின் குரல் தேய்ந்து கரைந்து நின்றது.

பிரமை பிடித்தவர்கள்போல் மௌன மாயிருந்த நாயரும் மற்ற இளேஞர்களும் ஒருவரையொருவர் ஏறிட்டுப் பார்த்துக் கொண்டனர். பிறகு நாயர் மெல்லத் தொண்டையைக் கனேத்துக்கொண்டு, ''அது சரி, தம்பையா! அந்தப் பையனே எல்லாரும் 'நச்சி, நச்சி'ன்னு கூப்பிடு றுங்களே, அது என்ன பேரு?'' என்று விசாரித்தான்.

தம்பையா ஏதோ ஒரு பெரிய ஹாஸ்யத்தைக் கேட்டு விட்டவன்போல் கடகடவெனச் சிரித்துக் கொண்டே தலே நிமிர்ந்து, ''ஓ..... அந்தப்பேரா? அதை நான்தான் அவனுக்கு வைச்சேன். என் அப்பாரு ஒரு பள்ளிக்கூட வாத்தியா ருன்னுதான் உங்களுக்குத் தெரியுமே! அவர் எப்பப் பார்த்தாலும், 'அக நானூறு, புறநானூறு, சிலப்பதிகாரம், மணிமேகலே'ன்னு பிளுத்திக்கிட்டு இருப் பாரு. அத்தோடகூட, இளங்கோ வடிகள், சாத்தனுர், பனம்பாரனுர், நச்சினுர்க்கினியனுர் — இன்னும் இது மாதிரிப் பல பேர்களும் அடிபடும். இதை யெல்லாம் எப்பவோ நான் காதிலே வாங்கினதாக ஞாபகம். அதிலே 'நச்சினுர்க்கினியன்' என்கிற பேருதான் எனக்கு ரொம்பப் பிடிச்

சிருந்தது. அந்தப் பேருக்கு இன்ன அருத்தம்னு தெரியாது. சும்மா, தமாஷா அதையே பையனுக்கு வைச்சுப்பிட்டேன்'' என்று கூறி மீண்டும் நகைத்த அவன், ''இதாண்டா, விஷயம்! நச்சியை யாராவது 'உங்கப்பன் எங்கேடா'ன்னு கேட்டால், 'ஆப்பிரிக்காவிலே இருக்கிறான்'னு அவன் நிசத்தைச் சொல்றான்; கேட்கிறவங்க, தமாஷுக்குச் சொல்றானுக்கும்னு நினைச்சுச் சிரிக்கிறாங்க! இது நல்ல தமாஷ் இல்லே?'' என்றான்.

இந்தச் சமயம் தொலைதூரத்தில் ஒரு டாக்சி வருவது தெரிந்தது. தன் மயக்க நிலையிலும் அதன் நம்பரை எப்படியோ கூர்ந்து பார்த்துத் தெரிந்து கொண்டான் தம்பையா. சட்டென்று எழுந்து, ''இந்தாடா, மாதவன்! உனக்குச் சேர வேண்டியதை எடுத்துக்கிட்டு மீதியை, நாளைக்கு இங்கே நச்சி வந்தால் அவனிடம் கொடுத்து விடு!'' என்றவாறு ஓர் ஐந்து ரூபாய் நோட்டை எடுத்துக் கல்லாப் பெட்டி மேல் எறிந்தான். பிறகு சாலைக்கு விரைந்து போய்க் கையைத் தூக்கி ஆட்டி, ''என்னடா, ஆறுமுகம்! காலியாப் போறே?'' என்று உரத்த குரலில் கேட்டான்.

வேகமாக வந்த டாக்சி 'டக்' கென்று நின்றது. டிரைவர் வெளியே தலை நீட்டி, ''அடடே, நம்ம வாத்தியாரா? ஷெட்டுக்குத்தான் போறேன். வா, உன்னையும் கொண்டு போய் இறக்கி விட்டுப்பிடறேன்'' என்றான் பணிவு கலந்த சிரிப்புடன். அவனும் தம்பையாவின் சிஷ்ய கோடிகளில் ஒருவன் போலும்.

''நீ மைலாப்பூருக்குப் போகணும், இல்லையா?''

''அதுக்கென்ன, வாத்தியாருக்கு இல்லாத வண்டியா? சும்மா, ஏறிக்கொள்!'' உள்ளிருந்தவாறே கதவைத் திறந்து விட்டான் டிரைவர். தம்பையா தட்டுத் தடுமாறி ஏறி அமர்ந்ததும், டாக்சி கிளம்பிப் பறந்தது.

''இன்னு நாயர், இவர் நச்சியைப் பத்தி மட்டும் சொல்லிப்பிட்டுப் போயிட்டாரு? அவன் வீட்டிலே ஒரு வயசுப் பொண்ணு இருக்குது. அதைப் பத்தி ஒண்ணுமே சொல்லலியே!'' என்று குறும்புக் குரலில் கேட்டுக் கொண்டே பீடி பற்ற வைக்க வந்தான் ஒரு விடலை.

''அது இருக்கட்டும், நைனா! இவர் இவ்வளவு பேசுறாரே, இவரோட கதை இன்னுன்னு உனக்குத் தெரியுமா?'' என்றான் இன்னொரு விடலை.

''அப்பனே, எனக்கு இப்போ எந்தக் கதையும் வேண்டாம். மணி ரெண்டாயிடுச்சு. கடையைச் சாத்தணும்'' என்றவாறு வெளியே வந்த நாயர், ''எங்கே, வெள்ளம் பிடிக்கப் போன அந்தப் பையனைக் காணோம்?'' என்று பின்னால் திரும்பினான்.

''இதோ, நாயர்!'' என்று மெல்லக் கூறிய சபேசன், தண்ணீர் நிறைந்த வாளியுடன் கடைக்குப் பக்கவாட்டிலிருந்து வெளிப்பட்டான். அவன் அணிந்திருந்த சட்டை கால் சராய் எல்லாம் தெப்பமாக நனைந்து விட்டிருந்ததிலிருந்து பீச்சாங் குழாயில் தண்ணீர் பிடிக்க ஒரு பெரிய போராட்டமே நடத்தியிருக்கிறான் என்பது தெளிவாயிற்று. அத்துடன் அவன் ஏற்கனவே இங்கு திரும்பி வந்துவிட்டிருக்க வேண்டும் என்பதும், தம்பையா சொன்ன நச்சியின் கதையை அவனும் ஆதியோடந்தமாய்க் கேட்டிருக்கவேண்



''ஏன் தம்பி, இதுக்கு முந்தி நீ எங்கேயாச்சும் அரிசி அளந்து போட்டிருக்கியா?''

''போட்டிருக்கேனுங்க, கூட்டுறவுக் கடையிலே!''

''எப்படி அளந்து போடுவே?''

''அரிசிக் குவியல்லே லிட்டரைப் பாய்ச்சி...''

''பாய்ச்சியாவது! சும்மாப் பாய்ச்சறுப் போலப் பாய்ச்சிக் கையாலேதான் தூத்தருப் போல அரிசியை அள்ளி அள்ளிப் போட்டு லிட்டரை நெரப்பணும். அப்புறம்....?''

''கம்பியை எடுத்து அந்த லிட்டர் தலையை ஒரு வெட்டு வெட்டி....''

டும் என்பதும் அவனுடைய பீதியும் அநுதாபமும் தேங்கிய வெளுத்த முகத்திலிருந்தே புலனாகியது.

அங்கிருந்த விடலைகளும் மற்ற ரிக்ஷாக்காரர்களும் போய் விட்டார்கள். இரவெல்லாம் இப்படியே கண் விழித்துச் சுற்றிக்கொண்டிருந்து விட்டுப் பகல் பொழுதில் எங்காவது மரத்தடியிலோ பாலத்தடியிலோ படுத்துத் தூங்குவார்கள் போலும். அப்போது அவர்களை எந்தச் சட்டமும் எதுவும் செய்ய முடியாது. வாழ்க்கை நிலை சரியாக அமையாத இந்த நாட்டில் விலை மதிப்பற்ற மனித சக்தி எப்படியெல்லாம் விரயமாகிறது !

தண்ணீர் வாளியை உள்ளே வைத்துப் பலகைகளால் கடையைச் சாத்தி விட்டுத் திரும்பிய நாயர், ''தம்பிபோய் ! நீ எங்கே படுக்கப் போறே?'' என்று கேட்டான். பிறகு சாவதானமாக நிமிர்ந்து, ''அதோ பார், அந்த மன்றோ துரை சிலை இருக்கே, அதன் அடிவட்டத்து மேடையிலே போய்ப் படுத்துக்கோ. கல்லுத் தளம்; சுகமா நித்திரை வரும். உன்னோட சேட்டன் நச்சிகூட அங்கே தான் படுத்துக்குவான். யாராவது போலீஸ்காரங்க வந்து எழுப்பி மிரட்டினால், இந்தக் கடையிலே வேலை செய்யிறதாகச் சொல்லி விடு. ஒண்ணும் பண்ண மாட்டாங்க'' என்றவாறு பெஞ்சை இழுத்துக் கடைக்கு நேரே போட்டுக்கொண்டு, ''என்டே பகவதி அம்மே!'' என்று கொட்டாவியோடு முணுமுணுத்தபடியே படுத்து விட்டான்.

ஈரம் சொட்டிக் கொண்டிருந்த சட்டையைப் பிழிந்து விட்டவாறு தயங்கித் தயங்கிச் சென்றான் சபேசன். பிரும்மாண்டமான குதிரையின் மேல் கம்பீரமாக அமர்ந்திருக்கும் அந்த மன்றோ சிலையின் வட்டமான மேடை மேல் ஏறி நின்று கொண்டு அவன் பயப் பிராந்தியுடன் மேலே அண்ணாந்து பார்த்தான்.

(தொடரும்)

## வெட்டாதே, வழி!

''நாசமாய்ப் போச்சு, கம்பியாலே வெட்டிப் போட்டா நமக்கு என்ன மிஞ்சும்? அங்கேதானே இருக்கு தம்பி, நம்ம தொழில் நுட்பம்! பேசாம நீ நான் சொல்றதைக் கேளு: அரிசி வாங்க வந்தவன் கண்ணிலே படாமல் அந்தக் கம்பியை எடுத்து எங்கேயாச்சும் ஒளிச்சு வெச்சிடு. அவன் வந்ததும் நான் சொன்னாப் போல விட்டர்லே அரிசியை நெரப்பி வைச்சிட்டு, 'கம்பியை எங்கேயோ வெச்சேன், காணோமே!'ன்னு அங்கேயும் இங்கேயுமா தேடு, தேடு, தேடிக்கிட்டே இரு; அதுக்குள்ளே அவன் 'நேரமாயிடிச்சி'ன்னு குதியாய்க் குதிக்க ஆரம்பிச்சுடுவான். அதுதான் சமயம்னு, 'கையாலே வேணும்னு வெட்டிப் போட்டுடுங்களா?'ன்னு கேட்டுக்கிட்டே அந்த விட்டர் தலையோடு கழுத்தையும் சேர்த்து ஒரு வழி வழித்துப் போடு: அப்படிப் போடறப்போ, பத்து விட்டருக்கு ஒரு விட்டராவது நமக்கு மிஞ்சறாப்போல நீ பார்த்துக்கணும். என்ன தெரிஞ்சுதா?''

''தெரிஞ்சுதுங்க!''

''இப்படிச் சேர்த்த அரிசியையெல்லாம் ராத்திரி கடையை மூடறப்போ...''

''இங்கே வேலை செய்யறவங்க பங்கு போட்டு எடுத்திக்கிடணும்; அவ்வளவு தானுங்களே ?''

''ஆளைப் பாரு, ஆளை? அதெல்லாம் உங்க கூட்டுறவுக் கடையிலே அடிக்கிற கூட்டுறவுக் கொள்ளை! இங்கே எல்லாம் அது நம்ம வீட்டுக்கு வந்து சேரணுமாக்கும்? போய் வேலையைப் பார்!''

''சரிங்க !''

**கட்டளையிட்டவர் :**

**அரிசிக் கடை முதலாளி:**

**கட்டுப்பட்டவர் :**

**புதிதாக வேலைக்கு வந்தவர்.**

தகவல் :

**ஒரு கிரகஸ்தர்.**





# கயல்விழி

## பதினாறாம் அத்தியாயம்
## பாண்டியனின் சபதம்

சுந்தர பாண்டியன் கங்காபுரிக்குப் படைகளை அனுப்பி வைப்பதில் தீவிரமாக முனைந்து நின்ற அதே சமயத்தில் கயல்விழியும் தன்னுடைய தூது முயற்சியில் தீவிரமாக முனைந்திருந்தாள். "பெரியவர்களின் அனுமதியும் சுந்தர பாண்டியரின் இசைவும் இருந்தால் நான் உன்னைக் காஞ்சி நகரத்துக்கு அழைத்துக் கொண்டு போகிறேன்" என்று அவளிடம் வாக்களித்து விட்டார் விழுப்பரையர்.

கோப்பெருந் தேவியையே தன் முயற்சிக்கு முதல் துணையாகப் பற்றிக் கொண்டாள் கயல்விழி. அவரைக் கரை

அகிலன்

வாய்க் கரைத்து அவரிடம் மன்றாடத் தொடங்கினாள். தேவியாருக்கு ஏதுமே புரியவில்லை. சுந்தர பாண்டியனின் மனம் திருமணத்தில் நாட்டம் கொண்டிருப்பது அவருக்குத் தெரியும். திருமணப் பெண்ணோ ஏற்ற சமயத்தில் பிரிந்து செல்லத் துடிக்கிறாள்....

''கயல்விழி! திருமணம் செய்து கொண்டு அரண்மனையை அலங்கரிக்க வேண்டிய பெண் இப்படி வந்து மன்றாடுகிறாயே, இது சரிதானா?'' என்று கேட்டார் அவர். ''எதிர்காலத்துப் பட்டத்தரசி நீ! பகைவர் நாட்டுக்கு நீ தூது செல்வது பொருந்துமா என்று யோசித்துப் பார்.''

''அரண்மனையை நான் அலங்கரிக்க வேண்டுமானால், அடுத்த போரில் இந்த அரண்மனை மிஞ்சியிருக்க வேண்டுமே? நான் பட்டத்தரசியாக வேண்டுமானால் இளவரசருக்குப் பட்டம் நிலைக்க வேண்டுமே? அதனால்தான் நான் தங்களிடம் அநுமதி வேண்டுகிறேன்'' என்றாள் கயல்விழி.

கோப்பெருந்தேவியார் பேரதிர்ச்சி அடைந்தார். பெரும்பாலும் போரும் அரசியலும் ஆண்களின் கடமைகள் என்றே அவர் இதுவரையில் நம்பியிருந்தார். இப்போது கயல்விழியின் கூற்று அவரைத் திடுக்கிட வைத்தது. என்றாலும், ''அதற்காகவே விழுப்பரையர் போகும்போது, நீயும் ஏன் போய்த் துன்புற வேண்டும்?'' என்று கேட்டார்.

''தேவியாரே! பெண்களாகிய நாம் தான் போரின் கொடுமைகளையும் துன்பங்களையும் மிகுதியாக அநுபவிப்பவர்கள். ஆண்களுக்கு என்ன? 'வெற்றி அல்லது வீர சுவர்க்கம்' என்று தோள் தட்டிக் கொண்டு அவர்கள் களத்தில் குதித்து விடுகிறார்கள். அவர்கள் மாண்டு போனால் நாமும் தீக்குளிக்கிறோம் என்றே வைத்துக்கொள்ளுங்கள். நிராதரவாக விடப்பட்ட குழந்தைகளின் கதி என்ன ஆவது? முதியவர்களின் கதி என்ன ஆவது? அவர்களுக்காக நாம் வாழ்ந்தாலும் துன்பம்; மடிந்தவர்களுக்காக நாமும் மடிந்தாலும் துன்பம்; போரே நமக்குப் பெருந்துன்பம்!''

''கயல்விழி! நேரில் போரின் கொடுமையைக் கண்டதால் நீ எல்லாவற்றையும் உணர்ந்திருக்கிறாய். ஆனாலும் உன்னைப் போல் ஒரு பேதைப் பெண் எவ்வாறு நடக்கப் போவதைத் தடுத்து நிறுத்த முடியும்?''

''அங்கயற்கண்ணி அம்மையின்மேல் பாரத்தைப் போட்டு விட்டு என்னால் முடிந்ததைச் செய்கிறேன். கோசல சாம்ராஜ்யத்து அரசியாரிடமும் இளவரசிகளிடமும் எனக்குச் சிறிது பழக்கமுண்டு. நம்மைப் போலவே போர்



# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய்துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத்துலக்கும் முறையால், இது வரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு.

கால்கேட்டின் நீடித்திருக்கும், நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினுல் பல்துலக்குங்கள்.

நீங்கள் பற்பொடியை விரும்பினுல், இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒருடப்பி பலமாதங்களுக்கு வரும்.







... உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டெண்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.

DCO-35-TAM

களால் துன்புற்று அவர்களும் வருந்து வார்கள். வீர நரசிம்மருக்கும் நமது அரசியாரிடமும் பெண்களிடமும் பேரன்பு உண்டு. அந்த அன்பில் நம் பிக்கை வைத்து நான் செல்கிறேன்.''

அரசியார் யோசனையில் ஆழ்ந்து விட்டு, ''அரசரும் சுந்தர பாண்டிய னும் இசைய வேண்டுமே?'' என்று கேட்டார்.

''தாங்கள் மனம் வைத்தால் அரசர் இணங்கி விடுவார். பிறகு தாங்களும் அரசரும் விழுப்பரையரும் ஒன்றாகச் சேர்ந்து இளவரசரிடமும் கூறினால் அவரால் மறுக்க முடியாது. இளவரச ரிடம் மட்டிலும் நான் கோசல நாட்டுப் பெண்டிரிடமும் பேசப் போவது தெரிய வேண்டாம். புலவரோடு துணைக்குச் செல்வதுபோல் இருக்கட்டும்.''

கோப்பெருந் தேவியார் கயல்விழி யைக் கண்ணீர் அருவியோடு தழுவிக் கொண்டு உச்சியில் முத்தமிட்டார்.

''கயல்விழி! பாண்டிய நாடு உன் னைப் போல் ஒரு பெண்ணைப் பெற் றெடுத்ததாலேயே உயர்ந்து விட்ட தம்மா! என் வயிற்றில் பிறந்த பெண்ணைப் பிரிந்திருப்பது போல் நீ திரும்பும் வரையில் நான் உனக்காகத் தவித்திருப்பேன். நான் மற்றவர்களி டம் கூறி ஏற்பாடு செய்கிறேன். நீ பத்திரமாகத் திரும்பி விடு.''

புறப்படுவதற்கு வேண்டிய ஏற் பாடுகள் நடந்தன. மூன்று பெரியவர் களும் ஒரே குரலில் பேசியதால் சுந்தர பாண்டியனால் மறுத்துக் கூற முடிய வில்லை. இனம் விளங்காத துன்ப உணர்ச்சி வண்டைப் போல் அவன் உள்ளத்தில் புகுந்து குடையத் தொடங் கியது. கயல்விழி எப்படித் தன்னை விட்டுப் பிரிந்து செல்லத் துணிந்தாள் என்பது அவனுக்கே புதிராக இருந்தது.

ரதம் அரண்மனை வாயிலில் காத்து நின்றது. விழுப்பரையர் பெரிய பாண் டியரிடம் விடைபெற்றுக் கொள்வதற் காகச் சென்றார். ஆதிச்சதேவரும் கயல்விழியோடு புறப்படுவதாக இருந்த தால், அவரும் ரதத்தருகில் காத்து நின்றார். கோப்பெருந் தேவியாரிடமும் அரசரிடமும் வணங்கி விடைபெற்றுக் கொண்டு, சுந்தரபாண்டியனின் கூடத் துக்கு வந்தாள் கயல்விழி.

சுந்தரபாண்டியன் தன் கரங்களைக் கட்டிக் கொண்டு ஆசனத்தில் சிலை யென வீற்றிருந்தான். அவனுடைய கண்கள் இமைப்பதை மறந்தன. கயல் விழியின் புறத் தோற்றத்தை மட்டும் அவன் காணவில்லை. அவள் நெஞ் சையே இரு கூறுகக் கிழிப்பது போல் அவன் விழி முனைகள் கூர்மை பெற் றிருந்தன.

அவள் முகத்தினூடே அகத்தையும், அகத்தினூடே அதன் ஆழத்தையும் அந்த ஆழத்தினூடே அதன் உட் பொருளையும் காணத் துடிப்பவன் போல் பார்த்தான். 'யார் இந்தப் பெண்? இவள் எங்கிருந்து என்னிடம் வந்தாள்? ஏன் வந்தாள்? இவள் எங்கு போகிறாள்? ஏன் போகிறாள்?' என்று தனக்குத் தானே அவன் கேட்டுக் கொண்டான். ஆனால் அவனால் ஏதுமே அறிந்து கொள்ள முடியவில்லை. அவ னுக்கு எந்த விடையும் கிடைக்க வில்லை.

''தங்களிடம் விடைபெற்றுக் கொள்ள...'' அதற்கு மேல் பேச முடி யாமல் அவளுடைய நாத் தழுதழுத்தது. அவனை ஏறிட்டுப் பார்க்கத் துணி வின்றித் தலைகுனிந்து நின்றாள்.

''பெரியவர்களிடம் கூறி என்னைக் குழப்பத்தில் ஆழ்த்தி விட்டாய். அவர்கள் வாயிலாக என்னைச் செய லற்றவனாக்கி விட்டாய். இப்போது பெயரளவில் என்னிடம் விடைபெற வந்திருக்கிறாய்!''

மெல்லத் தரையில் முழந்தாளிட்டு அவன் பாதங்கள் இரண்டையும் தொட்டுத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள் கயல்விழி. அவளுடைய இருதயம் அவளுக்கே ஒரு சுமையாக வலித்தது. குமுறும் தன் உணர்ச்சிப் பெருக்கை எப்படியோ அடக்கிக் கொண்டாள்.

''தங்களுக்கும் நமது நாட்டுக்கும் அமைதி தேடி வரும் பெரும் பணிக்கு இப்போது புறப்படுகிறேன். நான் சிறு துரும்பினும் அற்பமானவள். ஆனால் நான் மேற்கொண்டுள்ள பணியோ மிகவும் புனிதமானது. இதில் நான் வெற்றியடைய வேண்டுமானால் தங் களது உளம் நிறைந்த ஆசி எனக்கு இருக்க வேண்டும். என் பணி வெல்ல வேண்டுமென்று முழு மனத்தோடு என்னை ஆசீர்வதித்து அனுப்புங்கள்.''

''உன்னை அனுப்பச் சொல்கிறாயா?'' என்று தொண்டை அடைக்கக் கேட் டான் சுந்தரபாண்டியன்.

''நான் தனியாகச் செல்லவில்லை; தங்களையும் என் எண்ணத்தில் சுமந்து கொண்டுதான் செல்கிறேன்... விடை கொடுத்து அனுப்புங்கள்!''

''விடை கொடுப்பதற்கு முன்பாக நான் உன்னிடம் ஒரு முக்கியமான

செய்தியைக் கூற வேண்டும்'' என்றான் அவன். அவள் தலை தூக்கிப் பார்த்தாள். அவன் கூற வந்த செய்தியைக் கூறாமலே தயங்கினான்.

''என்ன செய்தி?''

''பொன்னமராவதியிலேயே நான் இதைக் கூறியிருப்பேன். ஆனால் அதற்குள் நீ மூர்ச்சையுற்று விழுந்து விட்டாய். அதை இப்போது கூறுகிறேன்.''

இதைக் கேட்டவுடன் அவளுக்கு மீண்டும் மூச்சுத் திணறுவது போல் இருந்தது. அவன் கூறினான்:

''உன் எண்ணத்தில் நீ என்னைச் சுமந்து கொண்டு போனால் போதாது. நான் சுந்தரபாண்டியன்! சுந்தரபாண்டியன் உன் உள்ளத்தில் நிலைக்க வேண்டுமானால், உன் உள்ளம் அவன் வாழத் தக்க அரண்மனையாக இருக்க வேண்டும். நீயே உன்னைத் தாழ்த்திக் கொள்ளும் வழக்கத்தை இந்தக் கணத்திலேயே கொன்று விடு. 'அடிமை', 'பணிப் பெண்', 'விறலி' என்ற நினைவெல்லாம் இன்றோடு ஒழியட்டும்! நான் உன்னை அரசியாகத்தான் ஏற்றுக்கொள்ளப் போகிறேன். நீ எங்கு சென்றாலும் உன்னை முதலில் இந்த நாட்டு அரசி என்று நினைத்துக்கொள். அந்த எண்ணத்தோடு சென்று வா !''

''இளவரசே!'' என்று பதறினாள் கயல்விழி.

''நான் உன்னை அரசியாகத்தான் ஏற்றுக் கொள்ளுவேன்! இதுதான் என் முடிவு ! இதுவே என் சபதம்!''

கயல்விழியின் கண்களுக்கு முன்னால் அந்த மாளிகையே சுழன்றது. பொறி கலங்கிப் போய் நின்றாள் அவள். அவளுடைய உச்சி முதல் உள்ளங்கால்வரையில் தீப்பற்றியது போன்ற ஓர் உணர்வு பரவியது.

''சென்று வா; வென்று வா!'' என்றான் சுந்தர பாண்டியன். ''பாண்டிய நாட்டின் அரசியாவதற்குரிய எல்லா இலட்சணங்களும் உன்னிடம் இருக்கின்றன. போரில் நீ வெற்றி தந்தாய்; இப்போது அமைதியிலும் வெற்றி தேடிக் கொண்டு வருவாய். அரசியாரே, என் ஆசியோடும் வாழ்த்தோடும் சென்று வாருங்கள் !''

அருகிலிருந்த பொற்செப்பில் குங்குமம் நிறைந்திருந்தது. அதை எடுத்து அவள் நெற்றியில் புருவங்களுக்கிடையில் பொட்டிட்டு விட்டான் சுந்தர பாண்டியன். அந்தக் கரத்தைப் பற்றிக் கண்களில் ஒற்றிக் கொண்டு, மௌனமாக ரதத்தை நோக்கி மெல்ல நடந்தாள் கயல்விழி. அவளுடைய கால்கள் தடுமாறின.

## பதினேழாம் அத்தியாயம்

# சிங்கத்தின் கர்ஜனை

மழவச் சக்கரவர்த்தியிடம் பேசி ஒரு திட்டம் வகுத்துக் கொண்டு, பாண்டியப் படைகள் கங்காபுரியை நெருங்குவதற்கு முன்பாகவே காஞ்சிக்குப் போய்ச் சேர்ந்தார் விழுப்பரையர். அங்கிருந்த திருமுனைப்பாடி நாட்டு மாளிகையைச் சுற்றிலும் கோசல நாட்டு ஒற்றர்களின் நடமாட்டம் மிகுதியாக இருந்தது. இருப்பினும் முதலில் அங்கேயே சென்று இறங்கிக் கொண்டார். கயல்விழியும் ஆதிச்சதேவரும் ரதத்திலிருந்து இறங்கிய போது, அவர்களை இனம் கண்டு கொண்டார்கள் வீரநரசிம்மனின் ஒற்றர்கள். முன்பு பாணனாக வந்த பாண்டியனுடன் அரண்மனைக்கு வந்து தங்கியிருந்தவர்களல்லவா அவர்கள்?

விழுப்பரையருக்கு அங்கு வந்தவுடன் ஒரு நம்பிக்கை தரும் செய்தி கிடைத்தது. சயங்கொண்ட சோழ வல்லபர் முதல் நாளே காஞ்சியிலிருந்து புறப்பட்டு விட்டார் என்ற செய்திதான் அது. சோழ வல்லபர் அங்கிருந்தால், மிகவும் நிதானத்துடனேயே காலமறிந்து வீர நரசிம்மனைக் காண வேண்டும் என்று நினைத்திருந்தார் புலவர். இப்போதோ வழி நேராக இருந்தது.

ஆதிச்சதேவரையும் கயல்விழியையும் திருமுனைப்பாடி மாளிகையில் தங்கச் செய்துவிட்டுத் தனியாக அவர் கோசல நாட்டு மாளிகைக்குப் புறப்பட்டார். பாண்டிய நாட்டுக் கயல் துள்ளும் கொடியோடு ரதம் ஒன்று தெருவில் செல்வதை அனைவருமே வியப்போடும் திகைப்போடும் பார்த்தனர். கோசல நாட்டு வீரர்களின் விழிகள் அதைக் கண்டு அனல் உமிழ்ந்தன. ஆனால் போர் தொடங்குவதற்குக் கட்டளை பிறக்கவில்லையாதலால் அவர்களால் ரதத்தைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. ஒற்றர்கள்




# இவர்களுடைய வளமான வருங்காலம் இப்பொழுதே திட்டமிடப்படுகிறது

இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கின் ரெக்கரிங் டிபாஸிட் திட்டத்தின் சேமிப்பைக்கொண்டு.

குறைந்த பட்சம் ரூ. 5/-லிருந்து அதிக பட்சமாக அதன் பெருக்குத் தொகை ரூ. 500/- வரையில், டிபாஸிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்.

பிரதிமாதம் டிபாஸிட் செய்யும் தொகையான :

| | ரூ. 5/- | ரூ. 10/- | ரூ. 50/- | ரூ. 100/- | ரூ. 500/- |
|---|---|---|---|---|---|
| கீழ்க்கண்டபடி பெருகும் : | | | | | |
| 12 மாதங்களில் ரூ. | 61.00 | ரூ. 122 | ரூ. 610 | ரூ. 1,220 | ரூ. 6,100 |
| 24 மாதங்களில் ,, | 124.50 | ,, 249 | ,, 1,245 | ,, 2,490 | ,, 12,450 |
| 36 மாதங்களில் ,, | 192.00 | ,, 384 | ,, 1,920 | ,, 3,840 | ,, 19,200 |
| 48 மாதங்களில் ,, | 262.00 | ,, 524 | ,, 2,620 | ,, 5,240 | ,, 26,200 |

## இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் லிட்.

தலைமைக் காரியாலயம் : 151, மவுண்ட் ரோட், சென்னை-2

உங்களுக்கு சேவை செய்வதற்காக 100 க்கு மேற்பட்ட கிளை அலுவலகங்கள் இந்தியாவின் முக்கிய இடங்களில். இதில் தமிழ் நாட்டில் மட்டும் 60 க்குமேற்பட்ட கிளை அலுவலகங்கள் உள்ளது.

IOB-17 SA

எம். ஸிடி. முத்தையா
சேர்மன்

கே. எம். கருப்பா
ஜெனரல் மானேஜர்

கூட்டம் மட்டிலுமே சுறுசுறுப்பாக இயங்கியது.

மாளிகையின் வாயிற்காலவர் தலைவனிடம் செய்தியைக் கூறினர் விழுப்பரையர்: ''குலசேகர பாண்டியரிடமிருந்து சக்கரவர்த்திகள் வீரநரசிம்மருக்குத் திருமுகம் கொண்டு வந்திருக்கிறேனென்று கூறுங்கள். பாண்டிய நாட்டின் அரசவைப் புலவரான விழுப்பரையர் வந்திருப்பதாகத் தெரியப்படுத்துங்கள்.''

காவலன் திரும்பி வந்து விழுப்பரையரை அழைத்துச் சென்முன். வீர நரசிம்மனிடம் அதுவரை பேசிக்கொண்டிருந்தவர்கள் வெளியில் வந்து கொண்டிருந்தார்கள். நீண்ட கூடத்தின் பிற்பகுதியில் தனியே அமர்ந்திருந்தார் வீரநரசிம்மன். காவலர் தலைவன் உள்வாயில் வரையிலும் வந்து நின்றுவிட்டான்.

தம்மை நோக்கி வந்து கொண்டிருந்த புலவரின் தோற்றத்தை ஊடுருவிப் பார்த்தவாறே அமர்ந்திருந்தார் வீரநரசிம்மர். தோற்றத்திலும் நரசிம்மன்தான் அவர்.

''பாண்டியர் இருவரது அன்பையும் பாண்டிய நாட்டு மக்களின் அன்பையும் சுமந்து கொண்டு தங்களிடம் தூது வந்திருக்கிறேன். நான் பாண்டிய நாட்டின் அரசவைப் புலவர். விழுப்பரையர்என்று என்னைஅழைப்பார்கள்.'' வீரநரசிம்மனுக்குப் பணிவோடு கரம் கூப்பி வணக்கம் செலுத்திஞர் விழுப்பரையர்.

''ஓ! நீங்கள்தானு அந்தப் புலவர்? பாண்டிய நாட்டின் சாணக்கியரே, வாருங்கள்!'' என்று கர்ஜித்துக் கொண்டே இருக்கையைச் சுட்டிக்காட்டினுர் வீரநரசிம்மன்.

ஓலையை நீட்டினுர் புலவர். அதை வாங்கி அருகில் வைத்துக் கொண்டே, ''பாண்டிய நாட்டுப் புலவர்கள் என்ருலே என்ருல் அவர்களை நம்ப முடியவில்லை; உங்களுடைய இளவரசனையும் நான் புலவனின் வேடத்தில் கண்டிருக்கிறேன்!'' என்ருர்.

''அரசர்கள் மாறு வேடம் பூண்டு உலவுவது அரச தர்மமல்லவா? அதற்கொப்ப இளவரசரும் நடந்துகொண்டிருப்பார்.''

விழுப்பரையரின் வயதும் பணிவும் புலமையும் வீர நரசிம்மனின் உள்ளத்தில் அவரைப்பற்றிய நல்லெண்ணத்தை உருவாக்கத் தொடங்கின. என்ருலும், அவரால் சுந்தரபாண்டியனின் செயலைப் பொறுக்க முடியவில்லை.



''நாங்கள் போர் தொடுக்கப் போகிறோம் என்பதை முன்னதாகவே அறிந்து கொண்டு எங்களிடம் உறவு பூண விரும்புவது போல் நடிப்பதற்கு வந்திருக்கிறீர்கள்! அப்படித்தானே?'' இப்படிக் கேட்டுவிட்டு எரிமலை போல் பொங்கி எழுந்து சொற்களைக் கொட்டினுர் வீர நரசிம்மன். நெருப்புச் சுடர் சூழ்ந்த இடம் போல் அந்தக் கூடமே மாறிவிட்டது. தாம் உயிரோடு உள்ள வரையில் சோழ சாம்ராஜ்யத்தை அவர்களால் அசைக்க முடியாது என்று முழங்கினுர்.

விழுப்பரையர் எல்லாவற்றையும் பொறுமையோடு கேட்டுக்கொண்டார். வீர நரசிம்மனின் கர்ஜனை அடங்கவில்லை.

''நீங்கள் சோழ சாம்ராஜ்யத்தை அழித்தால் என்ன? எங்களை அழித்தால் என்ன? இரண்டும் ஒன்றுதானே? நாங்கள் யார் தெரியுமா? பாண்டிய யானைக்குச் சிங்கங்கள்! சோழ சாம்ராஜ்யத்தைப் பிரதிஷ்டை செய்வதற்கும் காப்பதற்கும் மட்டுமே பிறந்தவர்கள்! பாண்டிய யானை இப்போதுதான் சிம்ம சொப்பனம் காணத் தொடங்கியிருக்கிறது. அது வெறும் சொப்பனமாகவும் போய்விடாது என்று உங்கள் சுந்தர பாண்டியனிடம் கூறுங்கள்!''

''சக்கரவர்த்திகள் என்னை மன்னித்தருள வேண்டும். அச்சத்தின் காரணமாக என்னை அரசர் அவர்கள் தூது அனுப்பவில்லை.''

''இப்படிச் சொல்ல என்ன துணிவு உங்களுக்கு!'' என்று சீறினுர் வீர நரசிம்மன்.

''மெய்கூறவேண்டியது என் கடமை. அதையேதான் கூறுகிறேன். புதிதாக உருவாகியுள்ள பாண்டிய நாட்டின் தன்னுரிமையை மதித்து, அதையும் தங்களுடன் நட்புறவு கொண்ட நாடுகளில் ஒன்ருகத் தாங்கள் ஏற்றுக்




கொள்ள வேண்டும். இந்த வேண்டுகோள் கொண்ட ஓலையுடன்தான் நான் வந்திருக்கிறேன். பகைமையும் போரும் பிணக்கும் நிறைந்த இந்த உலகத்தில் அன்பை வளர்ப்பதே புலவர்களாகிய எங்களது தொழில். நாங்கள் எந்நாட்டவர்க்கும் பொதுவானவர்கள். தங்களது சித்தத்தில் பாண்டிய நாட்டுக்கு ஓர் இடம் வேண்டும்.''

பயங்கரமாக நகைத்தார் வீர நரசிம்மன். ''பாண்டிய யானை சோழ சாம்ராஜ்யப் புலியை அடித்து வீழ்த்திய துணிவில் சிங்கத்திடம் உறவு பேசத் துணிந்திருக்கிறது.''

''சக்கரவர்த்திகளே! பாண்டிய நாட்டில் யானைகளின் காலம் மாறிவிட்டது. அங்கே ஓர் இளஞ்சிங்கம் இப்போது தோன்றியிருக்கிறது. அந்த இளஞ்சிங்கம் இந்த வீரநரசிங்கத்திடம் பேரன்பும் பெருமதிப்பும் கொண்டிருக்கிறது. இனம் இனத்தைத்தானே சேரும்? இளஞ்சிங்கம் பெருஞ் சிங்கத்தின் நட்பை நாடி என்னை அன்புத் தூதாக அனுப்பி யிருக்கிறது.

வீரநரசிம்மன் மௌனமாக ஆலோசனையில் ஆழ்ந்தார். முன்பு கங்காபுரியில் குலோத்துங்க சோழருக்கு முன்பாகச் சுந்தர பாண்டியன் கூத்துப் பாடல் பாடிய காட்சி அவர் மனக் கண் முன்னே தோன்றியது. சோழர் முன்பாகவே அதைப் பாடத் துணிந்தவனை அவரால் தமக்குள் அப்போது பாராட்டாமல் இருக்க முடியவில்லை. அடுத்தாற் போல் இராஜராஜன் ஆத்திரப்பட்டு அவனை வாளால் குத்திக் கிழிக்க முனைந்த போதும் அவன் அதிர்ச்சியுறாமலிருந்தான். பாமினி குறுக்கே பாய்ந்து தடுத்திருக்கா விட்டால் விபரீதமாக அன்று ஏதும் நடந்திருக்கும். அவன் வீரன்தான்!

''வீரன் என்றால் சோழ நாட்டை அழிக்க வேண்டுமென்பதில்லையே?''

''எங்களது பாண்டிய நாட்டின் அடிமை இருளைத்தான் அவர் கட்டெரித்தார். சாம்ராஜ்ய ஆசை அவருக்கு இருந்தால் சோழ நாட்டை உடனடியாகத் திருப்பித் தந்திருக்க மாட்டார், சக்கரவர்த்திகளே! நாங்களாகவே சோழ சாம்ராஜ்யத்தை மீண்டும் பிரதிஷ்டை செய்துவிட்டோம்.''

கலகலவென்று நகைப்பொலி எழுந்தது வீரநரசிம்மனிடமிருந்து. ''வடக்கில் திருமுனைப்பாடி நாடும் போய் விட்டது. தெற்கில் பாண்டிய நாடும் போய்விட்டது. சோழ சாம்ராஜ்யம் பின் எங்கே இருக்கிறது?''

''அதன் அரசர் இராஜராஜனால் எந்த அளவுக்கு நாட்டைக் கட்டியாள முடியுமோ அந்த அளவுக்கு அவரிடம் இருக்கிறது. குலோத்துங்கரின் குமாரர் என்ற நிலைக்கும் தங்களது உறவினர் என்ற நிலைக்கும் அவர் தம்மைத் தகுதி வாய்ந்தவராக வளர்த்துக் கொள்ள வில்லை. பாண்டிய நாட்டுக்கு அவர் இழைத்த தீங்கை இந்தத் தலைமுறையில் உள்ள யாருமே மறக்க முடியாது.''

''என்ன இருந்தாலும் சுந்தர பாண்டியன் சோழ நாட்டுக்குச் செய்துள்ள இழிவை என்னால் மன்னிக்க முடியாது!'' என்று உறுமினார் வீர நரசிம்மன்.

''பாண்டிய நாட்டுக்குச் சோழ நாட்டால் ஏற்பட்ட துன்பங்கள் கண்டு அவரும் இப்படித்தான் கொதிப்படைந்தார்'' என்றார் புலவர் மெல்லிய குரலில்.

கூடத்தின் வாயிலருகே ஏதோ சத்தம் கேட்டது. வீர நரசிம்மன், விழுப்பரையர் ஆகிய இருவருமே திரும்பிப் பார்த்தார்கள். விழுப்பரையர் அங்கு கண்ட காட்சியால் பதற்றமடைந்து இருக்கையை விட்டு எழுந்தார்.

கயல்விழியும் ஆதிச்சதேவரும் வேல் தாங்கிய இரு காவலர்களுக்கு இடையில் நின்று கொண்டிருந்தார்கள்.

''முன்பு இங்கு வந்து நம் அரண்மனையில் தங்கிச் சென்ற பாண்டிய நாட்டு ஒற்றர்கள் இவர்கள். இன்று திருமுனைப்பாடி நாட்டிலிருந்து வெளியில் வந்தபோது சிறை செய்தோம்.''

''உங்கள் பெயர்கள் என்ன?'' என்று அதட்டினார் வீரநரசிம்மன். கயல்விழி பதிலளித்தாள்.

''இருவரையும் இங்குள்ள மாளிகைச் சிறையில் அடைத்துவையுங்கள்!'' என்று கட்டளையிட்டார் சக்கரவர்த்தி.

''சக்கரவர்த்திகளே! இதுதான் கோசல நாட்டுப் பண்பென்றால் முதலில் என்னைச் சிறையிலடையுங்கள்!'' என்று பணிவோடு வேண்டினார் விழுப்பரையர்.

**(தொடரும்)**

# கம்யூனிஸப் பாணி ஆட்சி கவிழுமா?

பத்திரிகைச் சுதந்திரம் பறி போய்விடும் போலிருக்கிறது இலங்கையில். நமது அண்டை நாட்டின் எதிர்காலம் எவ்வாறு இருக்கும்? நிகழவிருக்கும் தேர்தல்தான் நிர்ணயிக்க வேண்டும்.

இலங்கையில் தேர்தல் ஜுரம் படிப்படியாக விஷம்போல் இப்பொழுது ஏறிக்கொண்டிருக்கிறது. இதுவரையில் தேர்தல்களிலே இந்தியப் பிரச்னை, மொழிப் பிரச்னை, இனப் பிரச்னை, சமயப் பிரச்னை இதர பல உள்நாட்டுப் பிரச்னைகள் ஆகியவைகள்தாம் தேர்தல் பிரச்னைகளாக இருந்து வந்திருக்கின்றன. மார்ச் 22ந் தேதி நடைபெறும் தேர்தலோ இலங்கையில் அடுத்த ஆட்சி முழுக்க முழுக்க ஒரு மார்க்ஸிய ஆட்சியாக இருக்க வேண்டுமா அல்லது ஜனநாயக சோஷலிஸத்தைக் கடைப்பிடிப்பதாகச் சொல்லிக் கொள்ளும் ஒரு முதலாளித்துவக் கட்சியின் ஆட்சியாக இருக்க வேண்டுமா என்பதைத் திட்டவட்டமாக நிர்ண யிக்கக் கூடியதாக இருக்கிறது.

ஆளும் கட்சியான ஸ்ரீமதி பண்டாரநாயகாவின் தலைமை யில் உள்ள ஸ்ரீ லங்கா சுதந்திரக் கட்சி, இடதுசாரிக் கட்சிக ளான லங்கா சமசமாஜக் கட்சி, கம்யூனிஸ்ட் கட்சி ஆகிய வற்றின் முழு ஆதரவுடன் தேர்தல் போராட்டத்தை நடத்துகிறது. தேர்தலில் ஸ்ரீமதி பண்டாரநாயகா திரும்ப வும் அதிகாரத்துக்கு வந்தால் இலங்கை முழுக்க முழுக்க ஒரு கம்யூனிஸ்டு தேசமாகி விடும் என்பது முதலாளித்துவக் கட்சியான ஐக்கிய தேசியக் கட்சியினரதும் ஸ்ரீமதி பண்டார நாயகாவையும் அவரது ஆதரவாளர்களையும் எதிர்க்கும் மற்றவர்களது வாதமுமாகும். ஸ்ரீமதி பண்டாரநாயகா அரசாங்கம் இடதுசாரிப் போக்குடையதென்பதோடு பல தொழில்களையும் வர்த்தகத்தையும் தேசிய மயமாக்கியுள்ள படியாலும் தீவிர இடதுசாரிகளின் முழு ஆதரவோடு தேர்தல் போராட்டத்தை நடத்துவதாலும் அவர் மீண்டும் பதவிக்கு வந்தால் இந்நாடு கம்யூனிஸ்டு நாடாகிவிடும் என்பது இவர்கள் வாதம். ஆனால் ஸ்ரீமதி பண்டாரநாயகா வும் அவரது கட்சியைச் சேர்ந்தவர்களும் தாங்கள் காலஞ் சென்ற பிரதம மந்திரியான திரு பண்டாரநாயகாவின் ஜனநாயக சோஷலிஸக் கொள்கையையே கடைப்பிடிப்பதா யும் தாங்கள் மார்க்ஸியவாதிகள் அல்ல வென்றும் கூறு கிறார்கள். அத்துடன் மார்க்ஸியவாதிகள் தங்களுடைய கொள்கையை ஒப்புக் கொண்டு தங்களுடன் ஒத்துழைக் கிறார்களே தவிர தாங்கள் மார்க்ஸியவாதிகளின் மார்க் ஸிஸ்டுக் கொள்கையை ஏற்கவில்லையென்றும் கூறுகின்றனர். ஒப்புக்கொள்ளப்பட்ட திட்டவட்டமான பதினைந்து அம்சக் கொள்கை மீதே இடதுசாரிகளுடன் தாங்கள் கூட்டுச் சேர்ந்திருப்பதாக இவர்களது வாதம்.

## பத்திரிகைப் போராட்டம்

இவ்வருடப் பொதுத் தேர்தல் விசேஷ முக்கியத்துவம் வாய்ந்ததென்று சொல்ல இன்னொரு காரணமும் இருக் கிறது. ஸ்ரீமதி பண்டாரநாயகா அரசாங்கம் நாட்டில் மிகச் செல்வாக்குள்ள ''ஏரிக்கரைப் பத்திரிகைகள்'' 'டைம்ஸ் ஆப் சிலோன்' கோஷ்டிப் பத்திரிகைகள் ஆகிய வற்றைத் தனிப்பட்ட முதலாளிமார்கள் கைகளிலிருந்து பிடுங்கிக் கார்ப்பொரேஷன்கள் மூலம் நடத்தப் பல முறை சட்டம் இயற்ற முயன்றது. ஏதோ ஒருசில சட்ட நுட்பக் காரணங்களினால் இம்முயற்சி பலிக்காமல் போயிற்று. அரசாங்கத்தின் இந்த முயற்சியே அதன் தோல்விக்கும் இறுதிப்பென்று பொதுத் தேர்தலை நடத்த வேண்டிய அவ சியம் ஏற்பட்டதற்கும் காரணமாகும். ஸ்ரீமதி பண்டார நாயகா திரும்பவும் அதிகாரத்துக்கு வந்தால் முக்கியமான பத்திரிகைகளெல்லாம் தனிப்பட்ட முதலாளிமார்களிட மிருந்து பிடுங்கப்பட்டுத் தேசியமயமாக்கப்பட்டு விடும். இதில் சந்தேகமேயில்லை.



இந்தத் தேர்தல் பத்திரிகைகள் சம்பந்தப்பட்டமட்டில் ஒரு ஜீவ மரணப் போராட்டமாக அமைந்திருக்கிறது. எப்படியும் ஸ்ரீமதி பண்டாரநாயகாவின் கூட்டு அரசாங்கம் திரும்ப அதிகாரத்துக்கு வரக்கூடாதென்பதில் ஒரு கோஷ்டிப் பத்திரிகைகள் தீவிர அக்கறை செலுத்தி அதற்கு உகந்த முறையில் செய்திகளைப் பிரசுரிப்பதாகக் குற்றம் சாட்டப்படுகிறது. பத்திரிகைகளோ இது உண்மை அல்லவென்றும் தாங்கள் எப்பொழுதும் பாரபட்சமற்ற முறையில் நடப்பதாயும் இப்பொழுதும் அப்படியே நடப்பதாயும் அலறுகின்றன. பிரதம மந்திரி விடுக்கும் எந்த அறிக்கையிலும் பத்திரிகைகளை அவர் கண்டிக்காமல் இருந்ததில்லை. அதே போல் பிரதமரைக் கண்டிக்கும் செய்திகள் பத்திரிகைகளில் அதிகமாக இடம் பெறுவதையும் காணக் கூடியதாக இருக்கிறது.

## வானொலியின் நிலைமை

இலங்கை வானொலியைத் திருப்பினால் எப்பொழுதும் அரசாங்கப் பிரசாரத்தையே கேட்கக் கூடியதாக இருக்கிறது. அரசாங்கம் தனது பிரசாரத்துக்கு வானொலியைத் தனது ஏகபோக உரிமையாக்கிக் கொண்டிருக்கிறது. இதர அரசியல் கட்சிகளும் வானொலியில் தங்கள் கட்சிக் கொள்கையை எடுத்துச் சொல்ல நேரம் கொடுக்க வேண்டும் என்று கேட்டதற்குப் பிரதம மந்திரி இது வரையில் இணங்கவில்லை. நாட்டில் உள்ள பத்திரிகைகள் இதர கட்சிகளை ஆதரிப்பதாயும் தங்களை ஆதரிக்கப் பத்திரிகைகள் இல்லாத காரணத்தினால் தாங்கள் வானொலியை உபயோகிப்பதாயும் அவர் கூறுகிறார். மூவாயிரத்துக்கு மேற்பட்ட வானொலிப் பெட்டிகள் அவசரம் அவசரமாக ஹாலந்திலிருந்து தருவிக்கப்பட்டுக் கிராமப் பகுதிகளுக்கு விநியோகிக்கப்பட்டிருக்கின்றன. பத்திரிகைகளோ இது இந்நாட்டில் பத்திரிகைச் சுதந்திரமும் தனிநபர் சுதந்திரமும் இருக்கவேண்டுமா அல்லது கம்யூனிஸ்டு நாடுகளிலிருப்பதைப் போல் இந்நாட்டில் சர்வாதிகார ஆட்சி ஏற்பட வேண்டுமா என்பதை நிர்ணயிக்கப் போகும் போராட்டமாக அடுத்து வரும் பொதுத் தேர்தலை மதிக்கின்றன. இம்மாதிரியான சூழ்நிலையில் உலகில் வேறு எந்த நாட்டிலுமே பொதுத் தேர்தல் நடைபெற்றது கிடையாது. எனவே இலங்கையில் என்ன நடக்கப் போகிறது என்பதை அகில உலகமும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது.

## வல்லரசுகளின் பலப் பரிசோதனை

இலங்கை பெரிய வல்லரசுகளின் பலப் பரிசோதனைக் களமாக மாறியிருக்கிறதென்பது சிலருடைய புகார். அரசாங்கம் தீவிர இடதுசாரிச் சார்புடையதென்பதால் கம்யூனிஸ்டு நாடுகள் அரசாங்கக் கட்சிக்கும் அதனுடன் கூட்டுச் சேர்ந்துள்ள இடதுசாரிக் கட்சிகளுக்கும் ஏராளமாகப் பொருளுதவி செய்து வருவதாக எதிர்க் கட்சிகள் பகிரங்கமாகக் குற்றம் சாட்டுகின்றன. முக்கியமாகச் செஞ்சீனாவும் சோவியத் ருஷ்யாவும் அரசாங்கக் கட்சியின் தேர்தல் பிரசாரத்துக்கு அமோகமாக நிதியுதவி செய்வதாகக் குற்றம் சாட்டப்படுகிறது. கடந்த சில மாதங்களுக்கிடையில் இலங்கையில் சீனர்களின் எண்ணிக்கை திடீரென்று கூடி விட்டதாகவும் சீனர்கள் இலங்கையில் பொதுத் தேர்தலில் நேரடியாகவே தீவிர அக்கறை காட்டி வருகிறார்கள் என்றும் குற்றம் சாட்டுகிறார்கள். சீனர்கள் கட்டுப்பாடின்றி நாடு முழுதும் சுற்றித் திரிந்து கேந்திர ஸ்தானங்களையெல்லாம் புகைப்படம் பிடிப்பதாயும் இது நாட்டுக்கே ஆபத்தென்றும் பலர் எச்சரித்து வருகிறார்கள்.

இதே போல் எதிர்க்கட்சிகளுக்கு முதலாளித்துவ நாடுகள் அமோகமாக உதவி புரிவதாயும் முதலாளிமார்களின் பூரண ஆதரவும் எதிர்க்கட்சிகளுக்கு இருப்பதாயும் பதில் குற்றச்சாட்டையும் மேடைக்கு மேடை கேட்க முடிகிறது.

## இலங்கை இந்தியத் துண்டிப்பு

கடந்த வருட டிஸம்பர் மாத முடிவில் அடித்த புயலில் பாம்பன் பாலம் சேதமடைந்து விட்டதினால் இலங்கை இந்திய ரயில் போக்குவரத்து முற்றாகத் துண்டிக்கப்பட்டு விட்டது. இதனால் மக்கள் படும் துன்பத்தை வார்த்தைகளினால் வர்ணிக்கவே முடியாது. வாரத்தில் ஆறு நாட்களுக்குச் சென்னைக்கும் இரண்டு நாட்களுக்குத் திருச்சிக்கும் விமானப் போக்குவரத்து நடைபெறுகிறதென்றாலும் ஆகக் கூடுதலாக ஒரு விமானத்தில் நாற்பது பிரயாணிகளுக்கு மேல் பிரயாணம் செய்வதற்கில்லை. அடுத்த மாத இறுதி வரையில் விமானங்களில் எல்லா ஆசனங்களும் பதிவு செய்யப்பட்டு விட்டன. இதனால் இந்தியாவுக்கு அவசரமாகப் போய் வர வேண்டியவர்கள் போக முடியாமல் தவிக்கிறார்கள். நிறுத்தப்பட்ட ரயில் போக்குவரத்துக்குப் பதிலாக இலங்கைக்கும் தூத்துக்குடிக்குமிடையில் முன்போலக் கப்பல் போக்குவரத்தை மறுபடியும் நடத்த வேண்டுமென்று பலமாக வற்புறுத்தப்பட்டும் இது சம்பந்தமாக நடவடிக்கை எடுக்கப்படும் என்பதற்கான அறிகுறிகளைக் காணோம். நில மார்க்கமாக அனுப்பும் சாதாரணத் தபால்கள் கொழும்பிலும் இந்தியாவிலும் மலை மலையாகக் குவிந்து கொண்டிருக்கின்றன. சென்னையிலிருந்து வரும் வார சஞ்சிகைகளில் ஜனவரி மாதம் 3ம் தேதியிட்ட சஞ்சிகைகள்தான் கடைசியாக இலங்கைக்கு வந்தன. அதன் பிறகு இது வரையில் ஒன்றும் வராததால் பத்திரிகைகள் விற்கும் கடைகளெல்லாம் காலியாகக் காட்சியளிப்பது மிகப் பெரிய கன்றாவியாக இருக்கிறது. இலங்கையிலிருந்து இந்தியா செல்லும் பத்திரிகைகள் ஜனவரி முதல் தேதியிட்ட பத்திரிகைகள் ஜனவரி 28ம் தேதி இந்தியாவில் கிடைத்திருக்கின்றன. பொதுஜனங்கள் நிலைமை சீரடையும் வரை விமானத் தபாலில் கடிதங்களை அனுப்புவதுதான் நல்லது. —ரஜனி

தரத்திற்குத் தாயன்பே
உரைகல்....

# தரமறிந்த
# தாயன்பின்
# தங்கமான தேர்வு:
# டால்டா




சின்னஞ்சிறு வயதினிலே சீராட்டி வளர்க்கின்றாள், வளரும் பருவத்தில் வகைவகையாய்த் தருகின்றாள் வாயினிக்கும் நல்லுணவு ... அதன் ஒவ்வொரு கவளமும் ... உருவாக்குமே உடலுறுதிகொண்ட நாளையக் காளையினை. அவன் உண்ணும் ஒவ்வொரு கவளமும்... உரைக்குதம்மா எல்லையில்லா அன்பின் சுவை...நல்லநல்ல பண்டங்களின் நயம் ... டால்டா வனஸ்பதியின் திறம்! வைட்டமின்கள் செறிந்து, மங்காத புதுமையோடும், மாறாத தூய்மையோடும் ஸீலிட்ட டப்பாக்களில் மட்டுமே கிடைக்கும் டால்டா. ஆம், விழிப்புள்ள தாயறிவாள்: திறந்த டப்பாக்களிலிருந்து சில்லறையாக விற்கப்படுகின்றனவே அவை டால்டா அல்ல, வேறென்னவோ. பேரீச்சமர அடையாளமிட்ட டால்டா வனஸ்பதியே உரிமையோடு உபயோகியுங்கள். தூய்மையே உருவாக உமதன்பின் உரைகல்லிலும் அதன் அருமை மிளிரட்டும்.

**தூய்மையான தனிப்பெரும் சமையல் சாதனம் டால்டா வனஸ்பதி**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

DL 113-140 TM




# சிரிக்கவும்

ரயில் பிரயாணக் கட்டணம் உயர்த்தியிருப்பதைப் பற்றிக் கூறிய ரயில்வே மந்திரி ஸ்ரீ எஸ். கே. பாட்டீல் வேறு சில ருசிகரமான விஷயங்களையும் சொன்னார்.

ஹாக்கி, வாலிபால், வாட்டர் போலோ, டேபிள் டென்னிஸ் (ஸ்திரீகள் பந்தயம்) பாட்மிண்டன் (ஸ்திரீகள் பந்தயம்) கனம் தூக்குதல், கால் பந்து ஆகிய ஆட்டங்களில் ரயில்வே ஊழியர்கள் அகில இந்திய சாம்பியன் பட்டம் பெற்றிருக்கிறார்கள் என்று பெருமையுடன் கூறினார்.

நாமும் இதைப் பற்றிப் பெருமையடைவதோடு அந்தத் தகவலை வேறு விதங்களிலும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

டிக்கெட்டு வாங்கும்போது கட்டணத்தை இப்படி அடிக்கடி உயர்த்திக் கொண்டே போகிறார்களே என்று கோபம் வரும் போது, 'ஹா! ரயில் ஊழியர்கள் வாலிபால் வீரர்கள்' என்று எண்ணிப் பார்த்துச் சமாதானம் செய்து கொள்ளலாம். ரயில் வண்டிகளில் ஆடு மாடுகள் மாதிரி அடைபட்டு நின்று கொண்டிருக்கும் போது, 'ஹா! ரயில்வே ஸ்திரீ ஊழியர்கள் டேபிள் டென்னிஸ், பாட்மிண்டன் வீராங்கனைகள்' என்று எண்ணி நெருக்கடியை மறந்திருக்கலாம். ரயில் தண்டவாளத்தை விட்டுத் தடம் புரளும்போது, 'ஹா! நமது ரயில் ஊழியர்கள் நீச்சல் போட்டிப் பந்தயத்தில் இரண்டாவதாக வந்தார்கள்' என்று எண்ணிக் கழிபெருவகை அடைந்து கொண்டிருக்கலாம்.

* * *

கைதிகள் விஷயத்தில் அக்கறை எடுத்துக் கொண்டு உழைத்து வரும் மிஸ்லைஸ் நார்மன் பட்லர் என்ற ஆங்கில மாது சென்னையில் செய்த பிரசங்கமொன்றில், 'திறந்த வெளிச் சிறைச்சாலை' ஏற்படுத்த வேண்டும் என்று யோசனை கூறினார். நமது தேசத்தில் இப்போது திறந்தவெளி அரங்குகள் கட்டுவது நாகரிகமாக வந்து கொண்டிருக்கிறது. பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள் இவற்றில் இந்த அரங்குகளை ஏற்படுத்தி அவற்றை வெளியாருக்குக்கூட வாடகைக்கு விடுகிறார்கள். மாணவமாணவிகளுக்குக் கலைச் சூழ்நிலை இருப்பதற்காகப் போலும்!

இந்தத் 'திறந்தவெளி' வசதியைச் சட்டசபை அங்கத்தினர்களுக்கும் அளித்தால் நன்றாயிருக்கும். 'திறந்தவெளிச் சட்ட சபை'. அதைக் கற்பனை செய்து பார்த்தாலே உற்சாகமாயிருக்கிறது. வெற்றிலைபாக்கு போட்டுக் கொண்டிருக்கும் அங்கத்தினர்கள் அதைத் துப்புவதற்குப் போவதற்கும் பீடி குடிக்கும் பிரமுகர்கள் வெளியில் போய் விட்டு வருவதற்கும் மிகவும் சௌகரியமாயிருக்கும். வெளியேற்றம் செய்யும்போது அப்படியே நடந்து வீதியில் போய் விடலாமே!

* * *

தலையில் எஃகுக் குல்லாய் தரித்து, கையில் துப்பாக்கி ஏந்திய போலீஸ் வண்டி வருகிறதா என்று பார்த்துக் கொண்டே வீதியின் நடைபாதையோடு மிகவும் ஜாக்கிரதையாக நடந்து சென்று கொண்டிருந்தேன். ஏனென்றால், வண்டியில் இடம் காலியாக இருந்தால் தெருவில் செல்லும் அப்பாவிகளை வண்டியில் இழுத்துப் போட்டுக் கொண்டு போய் விடுகிறார்கள் என்று ஒரு வதந்தி பிறந்திருந்தது. அப்போது இரவு ஏழு மணி இருக்கும்.

''ஹே! ஸ்தம்ப் வேகக்!'' என்று கூப்பிடும் சத்தம் கேட்டது.

யாரோ ஒரு ஹிந்திக்காரர் இன்னொரு ஹிந்திக்காரரைக் கூப்பிடுகிறாராக்கும் என்று எண்ணினேன். அதே சமயம் வேறு விதமான பயம் தோன்றியது. பக்கத்தில் பையன்கள் யாராவது இருந்தால் ஹிந்தி வார்த்தைகளின் சத்தம் கேட்டுக் கற்களை விட்டெறிவார்களோ என்று காலை எட்ட வைத்து வேகமாக நடக்கலானேன்.

மறு கணம் முதுகில் யாரோ தட்டினார்கள். ''ஹே ஸ்தம்ப் வேகக்! பிரஷ்ட பூமி சமாசார் ஏதாவது கிடைத்ததா? இந்த வாரம் எழுதுவதற்கு?'' என்று விசாரித்துக்கொண்டு என் நண்பர் ஒருவர் என் பக்கத்தில் வந்தார்.

எனக்குச் சிறிது கோபம் ஏற்பட்டது. கண்டபடி யெல்லாம் வைவதற்கு மிகவும் அசங்கியமான வார்த்தைகள் ஹிந்தியில் ஏராளமாக இருக்கின்றன என்று ஸ்ரீ ஸ்ரீபிரகாசா சென்னையில் கவர்னராக இருந்த போது சொன்னது ஞாபகம் வந்தது. ஆனால் அந்த வார்த்தைகள் என்னவென்று தெரியாததால் அந்த நண்பர் தப்பித்தார்.

# சிந்திக்கவும்



நண்பர் விஷயத்தை விளக்கினார்.

'லேகக்' என்றால் எழுதுபவர். 'ஸ்தம்ப்' என்றால் பத்திரிகையின் ஒரு பத்தி.

'ஸ்தம்ப் லேகக்' என்றால் பத்திரிகையில் அரசியல், சமுதாய, கலை முதலிய பல விஷயங்களைப் பற்றிக் கதம்பமாக எழுதுபவர்!''

''சமாசார்'' என்றால் செய்திகள்.

'பிரஷ்ட பூமி' என்றால் அடிப்படையானது.

'பிரஷ்ட பூமி சமாசார்' என்றால் அடிப்படைச் செய்திகள் என்பதைக் குறிப்பதாகும் என்று அறிக.

அவர் இவ்வாறு விளக்கம் கூறியதும் இருவரும் ஒருவரை யொருவர் அணைத்துக் கொண்டு கண்ணீர் விட்டோம். அளவுக்கு மீறிச் சிரித்தால் கண்ணீர் வராதா ?

இந்த வார்த்தைகள் மத்திய அரசாங்கம் மிகவும் சிரமப்பட்டு ஏராளமான பொருட் செலவில் தயாரித்திருக்கும் ஆங்கில—ஹிந்தி அகராதியை அலங்கரித்துக் கொண்டிருக்கின்றன.

பெரும்பான்மை இந்திய மக்கள் 'ஹிந்தி ஒழிக' என்று கோஷமிட்டுக் கொண்டிருக்கும் போது, ஸ்ரீ ஆர். எம். சேஷாத்ரி ஹிந்தி வாழ்வதற்கு ஓர் அருமையான யோசனை சொன்னார். அதைக் குடியரசின் 'அலங்கார பாஷை'யாக ஏற்படுத்தி, முக்கிய விசேஷங்கள் சம்பந்தமான பிரகடனங்களை அதில் வெளியிடலாம் என்கிறார். நான் இன்னோர் அருமையான யோசனை சொல்ல விரும்புகிறேன்.

இப்போது, தேசத்தின் மிக முக்கியமான தலைவர்கள் காலமாகி விட்டால் ஹிந்தி அழுவதற்கு அகில இந்திய ரேடியோவால் உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது. ஒரு மாறுதலுக்காக, அதை ஹாஸ்ய பாஷையாகவும் உபயோகிக்கலாம். இந்தியாவில் பிறந்த ஹிந்தி மொழி இலக்கணத்தில் மற்ற இந்திய மொழி இலக்கணங்களாயிருப்பது போல் 'பொதுப்பால்' என்பது கிடையாது. பிரெஞ்சு, ரஷ்யன் முதலிய அந்நிய மொழி இலக்கணங்களில் இருப்பது போல் ஆண்பால், பெண் பால் என்ற இரண்டு பிரிவுகள் மட்டுமே உண்டு! இதன்படி ஹிந்தியில்,

மீசை என்பது பெண்பால்

ஸ்தனம் என்பது ஆண்பால்

இது போன்று எத்தனையோ வேடிக்கை அம்சங்கள் இதில் இருக்கின்றன; இவை போன்றவற்றையும், அரசாங்க அகராதியில் உள்ள விந்தையான மொழி பெயர்ப்புகளையும் சேர்த்து ஒரு ஹாஸ்யக் கதம்பக் கோவை நிகழ்ச்சி நடத்தலாம்!

ஃ ஃ ஃ

ஸோவியத் யூனியனின் சிறந்த விஞ்ஞானிகளுள் ஒருவரான திரு இக்னர்டாம், விஞ்ஞான அறிவு வளர்ச்சி அடைந்தது போதாதென்றும், அது இன்னும் அபிவிருத்தியடைய ஒரு மேதை தோன்ற வேண்டுமென்றும் 'இஸ்வெஸ்டியா' பத்திரிகையில் எழுதியிருக்கிறார்.

ஹிந்தி மொழியில் வெளியாகப்போகும் விஞ்ஞானப் புத்தகங்களைப் படித்துத் தேர்ச்சியடையப் போகும் ஒருவன் அந்தக் கைய மேதையாக விளங்கக் கூடும்.

ஃ ஃ ஃ

விதம் விதமான பொம்மைகள் செய்வதில் புகழ் பெற்ற நமது நாட்டில் 'அரக்கன்' பொம்மை அமைக்கும் கலை சமீப காலமாக அபிவிருத்தியடைந்து வந்து கொண்டிருக்கிறது.

ஏதாவது ஒரு கொள்கையையோ அல்லது ஒரு சட்டத்தையோ அல்லது வேறு எதையாவதையோ ஆட்சேபித்து ஆர்ப்பாட்டம் செய்பவர்கள் தமது ஆட்சேபத்துக்குப் பாத்திரமானதற்கு 'அரக்கன்' என்று பட்டம் சூட்டுகிறார்கள். பிறகு அந்த அரக்கனுக்கு ஓர் உருவம் கற்பனை செய்து வைக்கோலாலோ, துணியாலோ அவனை அமைக்கிறார்கள். பிறகு அவனைப் பகிரங்கமாக எரிக்கிறார்கள்.

தேசியப் போராட்ட காலத்தில் கள்ளரக்கனை எரித்து வந்தோம். சமீபத்தில் ஹிந்தி அரக்கன் தோன்றினான்; கடைசி கடைசியாக 'திருமண விரோத அரக்கன்' தோன்றியிருக்கிறான்.

பம்பாய் மருந்து உற்பத்தி வியாபாரிகள் தங்கள் ஆலைகளில் வேலை செய்யும் பெண்கள் விவாகம் செய்துகொள்ளக் கூடாது என்று ஒரு நிபந்தனை விதித்திருக்கிறார்கள்; இதை ஆட்சேபித்து 200 இளம் பெண்கள் ஒரு நாள் உண்ணாவிரதமிருந்துவிட்டுப் பிறகு திருமண விரோத அரக்கனை எரித்தார்களாம்.

— என்; ஆர்.

# கண்களே

ஆண்களுக்கு அனுமதியில்லாத ஓர் ஆஸ்பத்திரி அது. அதில் தன் மனைவியைச் சேர்த்து விட்டு, உள்ளேயும் நுழைய முடியாமல், வெளியேயும் செல்ல மனமில்லாமல் தவித்துக் கொண்டிருந்தான் வாசு. ஆம்! நிறைமாதக் கர்ப்பிணியான தன் மனைவியை முதல் நாள் இரவுதான் அவன் அந்த ஆஸ்பத்திரியில் கொண்டு வந்து விட்டிருந்தான். இரவெல்லாம் அவன் என்ன பாடுபட்டானோ? 'துணைக்குக் காம்பவுண்டுக்குள் படுத்துக் கொள்கிறேன்' என்று கெஞ்சிக் கேட்டவனைக் கூடக் காவற்காரன் விடவில்லை.

மறு நாள் சூரியனை எழுப்பி விட்டு, தானும் ஒரு 'சிங்கிள் டீ'யைக் குடித்து விட்டு மனைவியைப் பார்க்க இல்லை — அவளைப் பற்றி அறிந்து கொள்ள வந்து விட்டான் வாசு.

பெரிய மனசு பண்ணி, எட்டு மணிக்கெல்லாம் ஒரு நர்ஸ் கூறினாள்: "உன் பெண்சாதி இன்னும் அரை மணியிலெல்லாம் பெற்றுவிடுவாள் ஐயா" என்று.

"அப்படியா?"

வாசுவின் உடம்பெல்லாம் புல்லரித்தது. விவரிக்க இயலாத ஒருவித இன்ப லாகிரி மின்சாரம் போல் அவனது நரம்புகளுக்குள்ளெல்லாம் புகுந்து ஓடியது.

'ஆமாம்..... பிறக்கப் போவது பெண்ணா? பிள்ளையா?" ஊஹும்....! எதுவாக வேண்டுமானாலும் இருக்கட்டுமே. தன் வரையில் 'அப்பா'வாவது மட்டும் நிச்சயமல்லவா?' அடேயப்பா, மகிழ்ச்சி வெள்ளத்தில் அரை மணியும், அரை நிமிஷம் போல் எத்தனை சீக்கிரம் கரைந்தோடி விட்டது!

மீண்டும் அதே பழைய நர்ஸ் வெளியே வந்தாள். மிகுந்த ஆவலோடு தலையை நீட்டினான் வாசு.

"ஆணா — பெண்ணா?" இதயம் இதயத்தைக் கேட்டுக் கொண்டது. அவளோ ஒரு பெரிய இடியைச் சுமந்து வந்திருந்தாள் அவன் தலையில் போட.

"நீ.... ஒரு துக்கிரி ஐயா." எடுப்பிலேயே அவள் அவனிடம் உரிமையோடு கடிந்து கொண்டாள். ஆனால் அதில் பெரும் பகுதி வேதனைதான்.

"என்ன சொல்றீங்க, நர்ஸம்மா....?" வாசுவினது வாய் குழறியது.

"என்னத்தையா, சொல்றது....இதிலே கையெழுத்துப் போட்டுக் கொடு." பிரித்துப் பார்த்தான். நர்ஸே அதில் எழுத வேண்டிய நாலைந்து வரிகளையும் அவனுக்காக எழுதிக் கொண்டு வந்திருந்தாள். அவன் அதைக் கையில் வாங்கிக் கொண்டான்.

"இதெல்லாம்.... எதுக்கு நர்ஸ்.....?" ஒன்றும் புரியாமல் கேட்ட அவனை; எல்லாம் தெரிந்த அவள் பரிதாபமாகப் பார்த்தாள்.

"டாக்டரம்மா, உள்ளே உன் பெண்சாதி உயிரோட, ஒருமணி நேரமாகப் போராடிக்கிட்டிருக்காங்க. உனக்குப் பெரிய உசிர் வேணுமா? சின்ன உசிர் வேணுமா? ரெண்டு உசிருக்குமே ஆஸ்பத்திரி பொறுப்பில்லே... அதுக்குத்தான் இந்தப் பாரம் — போடு கையெழுத்தை — குழந்தையை ஆபரேஷன் செய்துதான் எடுத்தாகணுமாம்" என்றாள்.

"ஐயோ!" என்று வாசு தலையைப் பிய்த்துக் கொண்டான். "சின்ன உயிரா.... பெரிய உயிரா?" — இதன் பொருள்?— "மனைவியா, குழந்தையா?"—இதில் ஏதாவது ஏதேனும் ஒன்றைத்தான் நான் பெற்றுக் கொள்ள வேண்டுமா — இல்லை, இரண்டுமே போனாலும் ஆஸ்பத்திரிக்காரர்களாகிய உங்களைப் பொறுப்பாக்க மாட்டேன் என்று எழுதிக் கொடுத்தாக வேண்டுமா?

யோசித்து யோசித்து வாசுவின் மூளையே மரத்துப் போய்விட்டது.

"நர்ஸம்மா.... நான் கொண்டு வந்த உயிரையே என்னிடம் திரும்ப ஒப்புவித்து விடுங்கள். எனக்குக் குழந்தையும் வேண்டாம். குட்டியும் வேண்டாம்" என்று அழுதபடியே கூறிக் கையெழுத்திட்டு அனுப்பி விட்டான்.

தனிமை எவ்வளவு பயங்கரமானது என்பதை வாசு அப்போதுதான் உணர்ந்தான். "இந்தச் சமயத்தில், தங்கை கமலாவாவது அருகில் இருந்தால் எவ்வளவு ஆறுதலாக இருக்கும். இங்கு இவள் வேறு எத்தனை கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறாளோ? கமலாவின் மாமியாருக்கும் இந்தச் சமயம் பார்த்துத் தானா உடம்புக்கு வரவேண்டும்?" ஆனாலும் வாசு ஊருக்கு உடனே தந்தியடித்து விட்டான். கமலா வந்தாலும் வரலாம் என்று கனவு கண்டு கொண்டிருந்தான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் நர்ஸ் வந்தாள். முகத்தில் மீண்டும் அதே பழைய புன்சிரிப்பு.

"நீ, படா அதிர்ஷ்டக்கார ஆளய்யா." தேன் சொட்டான வார்த்தைகளை, செட்டாக வாரியிறைத்து விட்டு மாடி ஏறிச் சென்று விட்டாள்.

சற்று முன் "துக்கிரி" என்று ஏசியதற்கும் இப்போது, "அதிர்ஷ்டசாலி" என்று வாழ்த்துவதற்கும் — இடையிலுள்ள விஷயங்கள் ஓரளவு வாசுவுக்கு விளங்கின. 'சரி! டாக்டரம்மா, தன் முழுத் திறமையையும் காட்டி, தாயையும், சேயையும் காப்பாற்றி விட்டாள்' என்பது மட்டும் அவனுக்குப் புரிந்தது.

ஆம்! அதுதான் ஆரம்பத்தில் உண்மையாக இருந்தது. ஆனால் அடுத்த அரைமணிக்கெல்லாம் அவன் மீண்டும் துக்கிரியானான்.

எதிர்பாராதவிதமாக அவன் மனைவிக்கு ஜன்னி கண்டு விட்டது. அரை மணியில் எல்லாரையும் ஏமாற்றி விட்டுப் புண்ணியவதி போய் விட்டாள்.

தந்தியைப் படித்து விட்டுக் கமலா ஓடோடியும் வந்தாள் ஆஸ்பத்திரிக்கு. அண்ணியின் அகால மரணத்தைக் கேட்டு

# சாட்சி



கே.பி. நீலமணி

அழுது புலம்பினாள்: தங்க விக்கிரகம் மாதிரி யிருந்த தாயில்லாக் குழந்தை தாதிமாருக்கு மத்தியில் தொட்டிலில் துவண்டு கிடந்தது.

வாசு சுவரில் முட்டி மோதிக் கொண்டான். கழுத்தை நெரித்துக் கொள்ளப் போனவன் கையில் குழந்தையைக் கொடுத்து ஆஸ்பத்திரி வெளியே அனுப்பி வைத்தது.

வாசலிலே அவனுடைய சொந்த டாக்ஸி அவனைப் போலவே அனாதையாக நின்று கொண்டிருந்தது. குழந்தையையும், கமலாவையும் ஏற்றிக் கொண்டு நேராகக் கமலாவின் வீட்டுக்கே வண்டியை ஓட்டினான்.

குழந்தையைத் தங்கையிடம் ஒப்புவித்து விட்டு, ''நீதான் இதை வளர்க்க வேண்டும்'' என்றான். கமலா பதில் சொல்லவில்லை. 'ஆம்! அண்ணன் வண்டியை ஓட்டுமா, குழந்தையை வளர்க்குமா?'

கமலாவின் கணவனும் ஆரம்பத்தில் இதை மறுக்கவில்லை. குழந்தையை ஏற்றுக் கொண்டு விட்டான். ஆனால் இரண்டு மூன்று மாதங்களுக்குப் பிறகு தான் அவள் கணவன் சிவானந்தத்துக்கு விஷயம் புரிந்தது. மனைவியிடம் வந்து மிகவும் கடுமையாகக் கோபித்துக் கொண்டான்.

''இந்தக் குழந்தையை நீ உடனே உன் அண்ணனிட்டே கொண்டு போய் விட்டு விட்டு வரவேண்டும். கண்டவன் குழந்தையை யெல்லாம் வைத்துக் கொண்டு வளர்த்து ஆளாக்க இது என்ன அநாதை விடுதியா?'' என்று அவன் இரைந்தான்.

கமலா அப்படியே ஒரு கணம் பிரமித்து நின்று விட்டாள். பண்பே உருவான தன் கணவரா இப்படிப் பேசுகிறார்? எதிர்த்துப் பேசக் கூடாதென்று தான் அவள் எண்ணினாள். ஆனால் வார்த்தைகள் மேலும் மேலும் சூடாக வந்து கொண்டிருக்கவே அவள் தன்னையும் மீறிக் கேட்டு விட்டாள்.

''என் அண்ணன் குழந்தை உங்களுக்கு அன்னியன் குழந்தை ஆகி விட்டதா? அவரு டிரைவர் வேலையைப் பார்ப்பாரா, இல்லே குழந்தையைத் தாலாட்டிக் கொண்டு உட்கார்ந்திருப்பாரா? இப்படிப் பிறரிடம் பேச்சு வாங்காமல் — இதற்காகவாவது மறு கல்யாணம் செய்துகொள்ளச் சொன்னாலும்கூட இந்த அண்ணனுக்குப் புரியல்லே... அண்ணியையே நினைச்சுக்கிட்டு ஏங்குது.'' — கமலா வார்த்தைகளை முடிக்கவில்லை. சிவானந்தம் குறுக்கே சாடி விழுந்தான்.

''ஆமாம்..... பாவம் அண்ணன் செத்த பெண்சாதியையே நினைச்சுக்கிட்டு ஏங்குது; நீ அண்ணியையே நினைச்சுக்கிட்டு அழு: திருட்டு அண்ணனுக்கு ஏற்ற சரியான தங்கை. ஊரிலே தலைகாட்ட முடியவில்லே. மானம் போவுது!''

''என் மானம் போவணும்?''

''நீ வேறே எப்படிக் கேட்பே? பெண்சாதி செத்து நாலு மாசமாகல்லே, எவளையோ கட்டிக்கிட்டு அழுறான்னு, தெரிஞ்சவங்க, தெரியாதவங்க காறித் துப்பறாங்க. இவ பொரிகைக்காக வர்ரு அண்ணனுக்காக.'' — சிவானந்தம் வார்த்தைகளைப் படபடவென்று கொட்டி விட்டான்.

கமலா அப்படியே அசந்தே போனாள். ஒரு கணம் அவளுக்கு ஒன்றுமே புரியவில்லே. மூளை குழம்பியது.

''இது சுத்த அபாண்டம். உங்களுக்குத் தெரியாது, என் அண்ணனை. அப்படி யெல்லாம் சொல்லாதீங்க.... தெய்வத்துக்கே பொறுக்காது. நேத்துக்கூட அண்ணன், வீட்டுக்குப் போயிருந்தேன். தனியே உட்கார்ந்து அழுதுக்கிட்டிருந்திச்சு. டாக்ஸிகூட எடுக்கல்லே?

''சரி, நான் தர்றேன் விலாசம். வில்லிவாக்கத்திலே இந்த இடத்திலே போய்ப் பாரு. அங்கே யாருகூட அண்ணன் சிரிச்சுக் கும்மாளமடிச்சுக்கிட்டிருக்கான்னு கண்ணாலே பார்த்துவிட்டு வந்து சொல்லு. இந்தா, போறப்போ வெறுங் கையோடு போகாதே — இதையும் எடுத்துக்கிட்டுப்போ— ஆனால் வர்றபோது இங்கே திருப்பிக் கொண்டு வராதே'' என்று குழந்தையையும் தூக்கி அவள் கையில் திணித்து வெளியில் அனுப்பி விட்டான் சிவானந்தம்.

தாங்க முடியாத துக்கத்தினால் கமலாவுக்கு இருதயமே வெடித்து விடும் போல் இருந்தது. இளம் வயதில் பெற்றோரை இழந்து பாவாடை கட்டுகிற பருவத்திலிருந்து தனக்கு விவரம் தெரிந்த நாள் முழுவதும் அண்ணன் தன் பொருட்டுப் பட்ட கஷ்டநஷ்டங்களை யெல்லாம் கண்டு அனுபவித்தவளாயிற்றே. வாசுவின் நேர்மையையும், நல்ல குணத்தையும் பற்றிப் பேசாதவர்கள் யார்? அப்படிப்பட்ட அண்ணனுக்கா இப்படியோர் அவச் சொல்?

வில்லிவாக்கத்தில், கணவன் கொடுத்த விலாசத்தைக் கண்டு பிடிக்க, கமலா சிறிது கஷ்டப்படத்தான் செய்தாள்; ஏனெனில், அது ஊரை விட்டுச் சற்று விலகி இருந்தது. ஆனால் வீட்டைக் கண்டு பிடித்து உள்ளே நுழைந்ததும் கமலா அங்கே கண்ட காட்சி?

யாரோ ஒரு பெண் கட்டிலில் படுத்துக் கிடந்தாள். அவளருகே அவள் அண்ணன்



வாசு உட்கார்ந்திருந்தான். 'வீல்' என்று கமலா தன்னையும் மீறி அலறி விடுவாள் போலிருந்தது.

அதிர்ச்சியினாலும், ஆச்சரியத்தினாலும் கமலாவின் விழிகள் விரிந்தன. கையிலே குழந்தையுடனும் உள்ளத்திலே வேதனையுடனும் கட்டிலில் படுத்திருந்த பெண்ணை வெறிக்கப் பார்த்தாள்.

சற்றும் எதிர்பாராமல் இப்படியொரு சந்தர்ப்பத்தில் கமலா தன் முன் வந்து நிற்பாள் என்று வாசு கனவுகூடக் காணவில்லை. ''வா, கமலா !'' என்று அழைக்கக் கூட ஒரு கணம் நா எழவில்லை.

''என்ன அண்ணா விழிக்கிறாய்? நாடகம் எல்லாம் அம்பலமாகி விட்டதே என்றா? அல்லது இந்த ரகசிய இடம் இவளுக்கு எப்படித் தெரிந்து விட்டது என்றா? மானமாக, உன்னை வேறு கல்யாணம் செய்து கொள் என்று எவ்வளவோ கெஞ்சினேனே அண்ணா. அப்போதெல்லாம் மறுத்தது இதற்காகத்தானா? இறுதியில் என்னையே ஏமாற்றி விட்டாயே அண்ணா!''

''கமலா!''

வார்த்தைகளின் சூடு தாங்க மாட்டாமல் வாசு அலறினான். கமலா அந்தப் புண்ணை மீண்டும் சொல்லம்புகளினால் கிளறினாள்.

''இதைப் பற்றி யெல்லாம் கேட்க நீ யார் என்றுதானே அண்ணா கேட்கப் போகிறாய் ? அதை நான் கேட்கவும் வரவில்லை. இதோ இந்தக் குழந்தையை வளர்க்க யாருமில்லை என்று சொல்லி என்னிடம் கொண்டு வந்து ஒப்புவித்தாய். ஆனால் உன் குழந்தையை வளர்க்கக் கடமைப்பட்டவர்கள் ஏற்பட்டு விட்டார்கள் என்று சொல்லி என் கணவர் குழந்தையை இங்கே விட்டு வரச் சொல்லி விட்டார். இதோ உன் குழந்தை.''

வாசு ஒரு கணம் கலங்கியே போனான். அவனையும் அறியாமல் விழிகளின் ஓரத்திலே வைரத் துண்டுகளைப்போல் கண்ணீர் அரும்பிப் பளபளத்துக் கொண்டிருந்தது. காரியங்கள் எப்படி யெல்லாம் உருமாறி நிகழ்கின்றன என்பதை ஒரு கணம் எண்ணிப் பார்த்தான். நெஞ்சை இலேசாக வலிப்பதுபோலிருந்தது. எந்த வார்த்தைகள் யாருடைய முன்னிலையில் செவிகளில் விழக் கூடாது என்று எண்ணினானோ, அந்த மனம் புண்பட்டு விட்டது.

''உண்மையிலேயே என் மீது நீ சந்தேகப் படுகிறாயா, கமலா? உன் அண்ணன் மீது உனக்கு அவ்வளவு நம்பிக்கை அற்றுப் போய் விட்டதா கமலா?'' — வாசு அவள் காதருகே சென்று கேட்டான் தாங்க முடியாத அவமானத்தோடு.

''நான் யாரையும் குற்ற கூறவோ, அவநம்பிக்கைப்படவோ இங்கு வரவில்லை. ஆனால் இத்தனை பெரிய விஷயத்தைப் பற்றி நான் ஒருத்திதான் இதுவரை ஒன்றும் தெரியாமல் ஏமாளியாக இருந்து விட்டேன். என் கணவரிடம் வீணாக வாதாடினேன். இறுதியில் அவர் சொன்னதுதான் நடந்திருக்கிறது. கண்ணாரக் கண்டு விட்டேன். ஆனால் இப்படித் திருட்டுத்தனமாக வாழ்வதில்தான் உனக்கு விருப்பம் போல் இருக்கிறது.''


*The following particulars regarding the ownership of the 'KALKI', the Tamil weekly newspaper, are published, as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules, 1956.*

**FORM IV**

1. *Place of Publication :* Madras
2. *Periodicity of its Publication :* Weekly
3. *Name of Printer & Publisher :* R. Ananthanarayanan

*Nationality :* Indian

*Address :* 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10

4. *Name of Editor :* T. Sadasivam

*Nationality :* Indian

*Address :* 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10

5. *Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital:*

Sri T. Sadasivam, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Srimathi M. S. Subbulakshmi, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Sri R. Ananthanarayanan, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Sri K. Rajendran, 1, Fifth St., New Colony, Lake Area, Madras-34. Sri M. P. Kalyanasundaram, 3, Water Works Colony, Kilpauk, Madras-10. Sri V. Vaidyanathan, 3, Varadarajalu Naidu Road, Egmore, Madras-8. Sri K. R. Athmanathan, 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10.

1-3-65 *R. Ananthanarayanan*

*Publisher*


வாசு துள்ளி எழுந்தான். சொற்கள் விஷ முள்ளைப்போல் அவன் நெஞ்சைச் 'சுருக்' கென்று குத்தின. அதன் 'கடுப்'பை அவனால் தாங்க முடியவில்லை.

''கமலா! வார்த்தைகளைக் கொஞ்சம் நிதானமாகவே பேசு. நீயும் உன் புருஷனும் எண்ணுவது போல் இங்கே நான் திருட்டுத்தனமாக எந்தக் கவர்ச்சி வாழ்வையும் அனுபவித்து விடவில்லை. இனி மேலும் என்னால் பொறுமையாகக் குற்றச்சாட்டுகளைக் கேட்டுக் கொண்டிருக்க முடியாது. சந்தேகமாயிருந்தால் இங்கே வந்து பார்.'' — கட்டிலில் படுத்துக் கிடந்த பெண்ணின் மீதிருந்த போர்வையை அகற்றினான் வாசு.

மறு கணம்?

''ஆ''வென்று தன்னையும் மீறிக் கமலா பெரிதாகக் கதறியே விட்டாள். எலும்புக் கூடாக ஒரு பெண் அங்கே படுத்துக் கொண்டிருந்தாள்.

''ஏன் கமலா, கண்களை மூடிக் கொள்கிறாய்? பார்வைக்கு அப்பாற்பட்ட உண்மைக் காட்சிகளைப் பார்க்கப் பயமாயிருக்கிறதா? எலும்புருக்கி நோய்க்கு இரையான நல்லவள் ஏற்றிய விளக்குதான் கமலா இன்று உன் வீட்டில் ஒளி வீசுகிறது. இல்லாவிட்டால் செல்வத்திலே மிதக்கும் சிவானந்தம் உன் கையைப் பிடித்து விடுவாரா? அல்லது, மில்லிலே கிடைத்த நாற்பது ரூபாய் சம்பளத்தில்தான், கல்யாணமும் செய்து கொண்டு வாடகைக் கார் வாங்கி ஓட்டுகிறேன் என்கிற நினைப்போ!'' — ஆவேசம் வந்தவனைப்போல் வாசு பேசிக் கொண்டிருந்தான். கமலா ஒன்றுமே புரியாமல் அப்படியே பிரமை பிடித்தவள் போல் உட்கார்ந்து விட்டாள்.

ஆம்! வாசு இது வரையில் ஒரு மிகப் பெரிய விஷயத்தைக் கமலாவிடம்; ஏன் — இறந்து போன தன் மனைவியிடமேகூட மறைத்தேதான் வைத்திருந்து விட்டான். ஆனால் அது அவனது முடிவல்ல. அதற்கெல்லாம், அதோ அந்தக் கட்டிலில் படுத்திருக்கும் பெண்தான் பொறுப்பு. ஏன், வாசுவின் பிறந்த குழந்தையைக்கூடத் தான் இருக்கும் இடத்துக்குக் கொண்டு வரவேண்டாம். கமலாவே வளர்க்கட்டும் என்ற நல்லெண்ணத்துடன் கூறியவளும் அந்த அவள்தான்.

ஆனால் அந்த அவள் யார்?

அந்தத் தியாகியின் பெயர் சாந்தா.

பெற்றோரை இழந்து அநாதையான நிலையில், தங்கையையும் காப்பாற்றும் ஒரு பொறுப்பில் இருந்தான் வாசு. அப்போது, ஒரு மில்லில் நாற்பது ரூபாய் சம்பளத்துக்கு வேலை பார்த்து வந்தான். ஒரு நாள் மில்லின் மேஸ்திரி வாசுவைத் தன் வீட்டுக்கு அழைத்து வந்தார். கண்ணீர் மல்க மேஸ்திரி மனத்தைத் திறந்து அவனிடம் கதறி அழுதார். தாயற்ற தன்னுடைய ஒரே பெண் சாந்தாவைப் பற்றியும், ஆரம்ப நிலையில் இருந்த அவளது எலும்புருக்கி நோயைப் பற்றியும், யாருமே அவளை மணக்க மறுத்து விட்டதையும் மறைக்காமல் கூறினார். ''எப்படியாவது நீதான் அப்பா என்னுடைய அத்தனை சொத்துக்களோடு இந்தப் பெண்ணை ஏற்றுக் கொண்டு அவளுக்கு வாழ்வளிக்க வேண்டும்; மறுத்து விடாதே'' என்று அவன் காலில் விழுந்து விட்டார்.

வாசு யோசனையில் ஆழ்ந்தான். அவனது இருப்பிடம் ஏதேச்சையாகக் கதவருகில், நீர் கோத்த விழிகளுடன் தன்னையே பார்த்துக் கொண்டிருந்த பெண்ணின் பக்கம் விழுந்தது. 'என்னை நீங்களும் கைவிட்டு விடுவீர்களா?' என்று கேட்பது போலவே இருந்தது அவனுக்கு அந்தப் பார்வை. அப்போது உடனே அவனுக்கு யாருமற்ற கமலாவின் நினைவுதான் வந்தது.

வாசு மறுக்கவில்லை. சாந்தாவின் இதயக் கோயிலில் நிரந்தரமாக இடம் பெற்று விட்டான். மேஸ்திரி அதே நிம்மதியில் கண்களை மூடி விட்டார். ஆனால் சாந்தா அதன் பிறகுதான் தெய்வமாக இருந்து காரியங்களைச் செய்தாள்.

திரை மறைவிலிருந்து தன் கணவருக்குப் பிடிவாதமாக வேறு ஒரு கல்யாணம் செய்து வைத்தாள். கமலாவின் திருமணத்துக்காக அளவுக்கு மீறிப் பண உதவி செய்து பெரிய இடத்தைத் தேடிப் பிடித்தாள். கணவருக்கு ஒரு டாக்ஸி வாங்கினாள். வண்டி ஓடுகிறது. அவள் படுத்து விட்டாள் மரணப் படுக்கையில்.

இறுதிவரையில் தன்னை விளம்பரப்படுத்திக் கொள்ளாமல், கணவனுக்காகவே தியாக வாழ்வு வாழ்ந்த உத்தமியைப் பற்றி அத்தனையையும் அண்ணன் மூலம் கேட்டறிந்த கமலா தன்னையும் மீறி, ''அண்ணி'' என்று அலறிய வண்ணம் ஓடிச் சென்று சாந்தாவைக் கட்டிக் கொண்டாள்.

''என்னை மன்னியுங்கள் அண்ணி. இத்தனை காலம் எங்கள் கண்களில்கூடப் பட விரும்பாமல், எங்களுக்காகவே வாழ்ந்த உங்களுடைய தியாகத்தையும் அன்பையும் புரிந்து கொள்ளாமல் ஏதேதோ பேசி விட்டேன். என்னை மன்னியுங்கள் அண்ணி. நான் பெரும் பாபம் செய்து விட்டேன்'' என்று 'ஓ'வென அழுதாள்.

ஆனால் அந்த அழுகையைக் கேட்டு ஆறுதல் கூறச் சாந்தாவின் உடலில் உயிர் இல்லை: ஆசீர்வதிக்க ஆத்மாதான் அங்கே யிருந்தது.

---

# இந்தித் திணிப்பு:

## மக்கள் குமுறல்

நெஞ்சு பொறுக்காமல் நேயர்கள் எழுதும் எண்ணற்ற கடிதங்கள் வந்து குவிந்த வண்ணமிருக்கின்றன. மாணவர்கள் எழுச்சி, தாய்மார்களின் தாபக்குரல், கவிஞனின் காம்பீர்யம், நகைச்சுவையாளரின் நையாண்டி......... இப்படியாக அந்தக் கடிதங்களில்தான் எத்தனை விதங்கள்!

கடந்த பதினைந்து நாட்களாகச் சட்டத்தையும் ஒழுங்கையும் பாதுகாக்கிறோம் என்ற பெயரில் போலீஸ்காரர்கள் மாணவர்களுக்கும் அவர்களது உடைமைகளுக்கும் பெரும் சேதம் விளைவித்திருக்கிறார்கள். போலீஸ்காரர்கள் நாட்டின் காவலர்களாக நடந்துகொள்ளாமல் காங்கிரஸ் காவலர்களாக நடந்துகொண்டார்கள் என்ற உண்மை கடந்த இருபது நாட்களில் மதுரையில் நடந்த நிகழ்ச்சிகளால் வெட்ட வெளிச்சமாகி விட்டது.

இதுவே மாணவர்கள் போராட்டம் இத்தனை தூரம் வலுப்படுவதற்கும், பின்னர் பொதுமக்கள் அந்தப் போராட்டத்தில் குதிப்பதற்கும், ஏராளமான தமிழர்கள் மாள்வதற்கும் அடிப்படைக் காரணமாக விளங்கியது. எனவே இந்தி எதிர்ப்புப் போராட்டம் நன் திசை மாறி ஒரு வெறிச் செயலாக மாறுவதற்கும் வித்திட்டவர்கள் காங்கிரஸ்காரர்களே ஆவர்!

26ம் தேதி தியாகராசர் பொறி இயல் கல்லூரியில் போலீஸ்காரர்கள் மாணவர்களைக் கல்லூரி எல்லைக்குள் இரண்டு பர்லாங் தூரம் விரட்டிச் சென்று அடித்தார்கள். போலீஸ்காரர்களுக்குப் பயந்து கதவைச் சாத்தியவாறு தங்கள் அறைக்குள் இருந்த மாணவர்களை அறைக் கதவைப் பலாத்காரமாக உடைத்து, அவ்வறைகளுக்குள் கண்ணீர்ப் புகைக் குண்டுகளை வீசியவாறு மாணவர்களை அடித்து நொறுக்கினார்கள். மூன்று மாணவர்கள் கொண்ட ஓர் அறையில் இரண்டு குண்டுகளை வெடிக்க வேண்டிய அவசியம் போலீஸ்காரர்களுக்கு ஏன் ஏற்பட்டது என்று புரியவில்லை. இத்தனைக்கும் மாணவர்கள் செய்த தவறு தமது கல்லூரி எல்லைக்குள் கறுப்புக் கொடியைப் பறக்க விட்டதே. அப் பொறி இயற் கல்லூரி தனியார் கல்லூரி என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இத்தனைக்கும் போலீஸ்காரர்கள் கூறும் பதில், மாணவர்களை என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்று அதிகார வர்க்கத்திடமிருந்து அவர்களுக்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறதாம்.

மதுரைக் கல்லூரியில் போலீஸ்காரர்கள் புகுந்து புரிந்த அக்கிரமங்களை எழுதுவதற்கு நெஞ்சு கிளிர்க்கிறது. கல்லூரி முதல்வரையும், பேராசிரியரையும், விரிவுரையாளர்களையும் அடிக்கிற அளவுக்குப் போலீஸ்காரர்களின் நெஞ்சிலே அன்று துணிவு பிறந்தது. இதுவும் அதிகாரவர்க்கத்தின் ஆணைபோலும்!

எந்த அதிகார வர்க்கம், மாணவர்களின் சீரிய சிந்தனையைச் சிதற வைத்து, அவர்களைக் கொதிப்படைய வைத்துப்பலாத்காரச் செயல்களில் அவர்களை வெறி கொண்டவர்கள் போல ஈடுபடுத்தியதோ, அந்த அதிகார வர்க்கத்தின் சவப் பெட்டியை இன்றைய மாணவ இளைஞர் சமுதாயம் தயாரித்துக் கொண்டு வருகிறது என்பதை அவ்வர்க்கத்துக்கு நினைவுபடுத்துகிறேன்!

மதுரை
15—2—65

ம. ரா. கி. மித்ரா
தியாகராசர் பொறி இயற் கல்லூரி மாணவர் பிரதிநிதி

***

10—2—65 அன்று நடந்த விஷயங்களும் மாணவர்கள் இறந்த எண்ணிக்கையும் கேட்டு மனம் கொதிக்கிறது. மாணவர்களுடைய உணர்ச்சி அடங்குவதாக இல்லை. ஆட்சியாளர்களும் அவர்களை அடித்துக் கொன்றுவது அடக்கப் பார்க்கிறார்களே தவிர, விட்டுக்கொடுத்து அவர்களைச் சமாதானப்படுத்தத் தயாராயில்லை என்பது தெரிகிறது. இந்தக் கொடுமை மிகவும் அநியாயமானது. நாட்டில் உள்ள பிள்ளைகள் எல்லாரும் நம் பிள்ளைகள் போலத் தானே? நம் பிள்ளை ஒருவரை வீட்டுக்குள் அடக்கி வைத்துக் கொண்டால், மற்றவர்கள் அடிபட்டுச் சாகலாமா? எத்தனை பெற்றோர்கள் வயிறு எரிவார்கள்? இது வீண் போகுமா? அப்படியும் அவர்கள் ஏதாவது கொலை கொள்ளை செய்தார்களா? தங்களுக்கு வேண்டாத பாஷையைத் திணிக்காதீர்கள் என்று தானே எதிர்க்கிறார்கள்? அதற்கு அடக்குமுறை செய்வதால் தானே அத்துமீறுகிறார்கள்? வெள்ளையர் ஆட்சியில்கூட இந்தக்

கொடுமை நடந்திருக்குமா என்று தோன்றுகிறது. காங்கிரஸ்காரர் சுதந்திரத்துக்காகப் போராடினர் என்றால் இவர்கள் தங்கள் வருங்காலக் கெடுதல்களுக்காகவும் தங்கள் மொழிக்காகவும் போராடுகிறார்கள். அதில் இவர்கள் எந்த விதத்தில் தாழ்ந்துபோனவர்கள்? யாருக்கும் சுதந்திரத்துக்குப் பிறகும் தன் நாட்டிலேயே, தன்னைப் போலொத்த அடுத்தவனிடம் அடிமையாக நேரிடும் என்ற உணர்வு வந்தால் அவர்கள் கொதித்தெழத்தான் செய்வார்கள். ஆட்சியாளர்கள் தங்கள் ராஜ்ய மக்களுக்கு நன்மை செய்ய முற்பட்டுப் பயத்தை நீக்காமல் அவர்களே பின்னைகளுக்கு யமனாகவும் மாறியிருக்கிறார்களே! ஒரு வேளை ஜனத்தொகையைக் குறைக்க இது ஒரு வழியா? ஏற்கனவே தனுஷ்கோடிப் புயலினால் தமிழ்நாட்டில் இறந்தவர் தொகை பற்றாதா? இந்தக் குழந்தைகளின் சாவைத் தடுத்து அவர்களுக்குப் படிப்புக்கு வழி செய்ய ஒருவராலும் முடியாதா?

தூத்துக்குடி
11—2—65 ஞானம்பாள்

❀❀❀

**கையிலுள்ள சாட்டையினைக் கீழே போடு!**
**காட்டுவண்டி ஓட்டியதை மறந்து போடு!**
**பையிலுள்ள பொய்க்கமையை அகற்றிப் போடு!**
**பாதையிலே என்னுடனே ஒன்று கூடு!**

**ஆட்சியிலே ஏறியதும் வண்டி ஓட்டும்**
**அதிகாரி எனும்எண்ணம் இனிப்போ கட்டும்!**
**மாட்சியினை அடைந்திடவே ஆட்சி வண்டி**
**வலிப்பதிலே நான்மாடு, நீயும் மாடே!**

**நீதிஎன்னும் கைகாட்டி, சமுதாயத் தின்**
**திருவுள்ளம் நிற்கிறது வண்டி மீதில்;**
**நீதியிடம் தண்டனையாம் சாட்டை வந்தால்**
**நீயும்தான் அடிபடுவாய் மறக்க வேண்டாம்!**

**சாலை இளந்திரையன்**

❀❀❀

இந்தத் தமிழ்நாட்டு மாணவர்களை என்ன செய்தாலும் தகும். இவர்களுடைய வருங்காலம் எக்கேடு கெட்டால் யாருக்கென்ன? அதற்காக இப்படியா அமர்க்களம் செய்வது?

மாணவர்களைச் சொல்லியும் பிரயோஜனமில்லை. இவர்களைத் தூண்டிவிட்டார்களே அவர்களைச் சொல்ல வேண்டும். இந்த மாணவர்களைத் தூண்டிவிட்டது நிச்சயமாகத் தி. மு. க. தான். — இல்லை.. இல்லை.. ராஜாஜி தான்.... இல்லை... இல்லை... கம்யூனிஸ்டுகள் தான்... நோ, நோ... இந்த இடதுசாரி கம்யூனிஸ்டுகள்தான்.... சே...சே..இல்லை.. இந்த.....ஆ!....இந்த மில் முதலாளிகள்தான்! இந்த மில் முதலாளிகள் ஏன் இந்த மாதிரி செய்ய வேண்டும்? அதைச் சொல்ல முடியாது. அது டாப் ஸீக்ரட் — பரம ரகசியம். இருந்தாலும் சொல்லிவிடுகிறேன். வருமான வரி வசூல் பிடிக்காமல் இப்படிச் செய்துவிட்டார்கள்; வருமான வரிக்கும், வண்டிகளுக்கு நெருப்பு வைப்பதற்கும் என்ன சம்பந்தம் என்று கேட்கிறீர்களா? ஏன் சம்பந்தமில்லை? ஹிந்திக்கும் ஆட்சி மொழிக்கும் என்ன சம்பந்தமோ அதே சம்பந்தம்தான். தெருவில் குமாஸ்தாகளை உருட்டிவிட்டுப் போலீஸ் வராமல் தடுத்தார்களே அதிலிருந்தே தெரியவில்லையா இது மில் முதலாளிகளின் வேலைதான் என்று! இல்லாவிட்டால் ஒருவேளை கார்ப்பரேஷன் காரர்கள் செய்த சதியோ? அவர்கள்தானே குமாஸ்தாகளைத் தெருவில் வைத்தார்கள், கற்களை வைத்தார்கள்! இப்படியெல்லாம் செய்து கலாட்டா நடக்க உதவியிருக்கிறார்கள்: இந்தப் பெட்ரோல்பங்க் முதலாளிகளும் இதில் கலந்து கொண்டிருக்கிறார்கள். நெருப்பு வைப்பவர்களுக்குப் பெட்ரோல் எங்கிருந்து கிடைத்தது? இவர்கள் விற்றதால்தானே? பெட்ரோல் பங்கில் பெட்ரோல் விற்கலாமா? என்ன அட்டூழியம்? ஜனவரி 26ந் தேதியிலிருந்து கறிகாய் விற்பதுதானே? ''சே''

❀❀❀

**நந்தி :**

சுதந்திரத்துக்காக உயிர் நீத்த வீரத் தமிழருக்கு அனுதாபங்கள். விசேஷப் பிரார்த்தனைகள் நடைபெறுகின்றன.

போர்ட் லூயி (மொரிஷியஸ்)
15—2—65 தமிழர் ஐக்கிய கட்சி

❀❀❀

நான் எந்தக் கட்சியையும் சேர்ந்தவளல்ல. காந்திஜி, நேருஜி இவர்கள் மீது அத்தியந்த அன்பும் பக்தியும் கொண்டவள். நேருஜிக்குப் பின்னர் லால்பஹாதூர் சாஸ்திரி பிரதமரானவுடன் வடநாட்டில் வாழும் தமிழர்கள் பலர் அதிருப்தி கொண்டார்கள். சொந்த விஷயத்தில் சாஸ்திரிஜி நல்லவர். அடக்கமானவர். படாடோபமற்றவர். அவர் மனைவியை எனக்குத் தெரியும். ஆனால் அவர் ஹிந்தி அனுதாபியே. லால்பஹாதூர் பிரதமரானவுடன் தமிழர்கள் ''ஹிந்தி'' ஆட்சி பீடத்தைக் கைப்பற்றியாகி விட்டதென்றே உணர்ந்து விட்டனர்.

லால் பஹாதூர் பிரதமராகித் தமிழர்களுக்கு என்ன நன்மை செய்திருக்கிறார்? பர்மாவிலிருந்து தமிழர்கள் விரட்டப்பட்டதை அவரால் தடுக்க முடியவில்லை. இலங்கையிலிருந்து தமிழர்கள் விரட்டப்பட 'ஒப்பந்தம்' என்ற பெயரில் அவரே ஊன்றுகோலாக இருந்திருக்கிறார். பலமான எதிர்ப்பு இருந்தும் ஹிந்தியைப் பொது மொழி எனப் பிரகடனப்படுத்தி விட்டு, ''தமிழர்களுக்கு ஏதும் அநீதி இழைக்கப்படவில்லை'' என்று மார் தட்டுவதை நினைத்தால் அழுவதா, சிரிப்பதா என்று தெரியவில்லை.

இனியும் அநீதிக்கு இடம் தரக் கூடாது; ஹிந்திக்காரர்களுக்கு அடிமையாவதற்காகத் தமிழராகிய நாம் ஆங்கில ஆட்சியை அகற்றவில்லை; பாரதம் உண்மையில் ஜனநாயகத்தில் நம்பிக்கை வைப்பதானால் இன்று மட்டுமல்ல என்றென்றும் ஆங்கிலமே பொதுமொழியாக இருக்க வேண்டும்;

ஜாக்ரகந்த்
14—2—65 லலிதா பரமேசுவரன்



# சிறந்ததையே வற்புறுத்துகின்றவர்கள்
# ப்ரூக் பாண்ட் தேயிலையை விரும்புவது ஏன்?

இந்தியாவிலே அன்றாடம் 7 கோடியே 50 லட்சம் கோப்பை ப்ரூக் பாண்ட் தேனீரை மக்கள் அருந்துகின்றனர். அவர்களில் எவரிடம் கேட்டாலும் ப்ரூக் பாண்ட் தேயிலை நல்ல ருசியுடன் முழுத் திருப்தி அளிக்கிறது என்றே கூறுவார்கள். ஆனால் அதன் காரணத்தை அவர்களால் சொல்ல முடியாமற் போகலாம். ப்ரூக் பாண்ட் கம்பெனியாரும் சிறந்ததையே வற்புறுத்துகின்றவர்கள். ஆதலால் இந்தியாவிலுள்ள மிக உயர்ந்த தேயிலைகளைத் தேர்ந்தெடுத்து, 60 ஆண்டுகளுக்கு மேலான அனுபவத்தால் கலவை செய்வதிலே முதன்மையான அவர்கள், தங்கள் திறமை மூலம் சிறந்த தேயிலைகளைக் கலவை செய்கின்றனர். பிறகு, கலவைகளை பிரதி வாரம் உங்கள் வழக்கமான கடை உட்பட இந்தியாவெங்குமுள்ள 6,00,000 கடைகளுக்கு அனுப்புகின்றனர். இதனாலேயே, முற்றிலும் புதிய தன்மையுடனும் நறுமணத்துடனும் நீங்கள் தேனீர் அருந்தி அனுபவிக்க, ப்ரூக் பாண்ட் தேயிலை உத்தரவாதம் அளிக்கின்றது.

உங்களைப்போல் — வாழ்க்கையில் நல்லவைகளிலே இன்பம் துய்ப்பவர்கள் ப்ரூக் பாண்ட் தேயிலையை விரும்புவதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை!




JWT BB 2128

# மனிதனை இழுக்கும் குகை

பிலோ இருதயநாத்

'தமிழ்—மலையாளி'களைக் காண வேண்டும் என்று திருப்பத்தூரிலிருந்து, பஸ்ஸில் சென்றேன். 'கூட் ரோடு' என்னும் இடத்தில் பஸ்ஸை விட்டு இறங்கியதும், ''அந்த வழியாக நேராகப் போங்கள்'' என்று சர்வ சாதாரணமாகக் கூறினார் டிரைவர். 'நன்றி' என்று அவருக்குக் கூறிய பின் செம்மண்பாதையில் தனிமையில் நடந்தேன். என் மூட்டைகளையும், பைகளையும் நானே தோளிலும், கையிலும் தூக்கிக் கொண்டு போகும் காட்சியைக் கண்ட ஒருவர், ''நீங்கள் கிறிஸ்துவ வேதம் போதிக்க மலை மலையாகப் போகிறீர்களா?'' என்று கேட்டார்.

''இல்லை! நான் ஓர் எழுத்தாளன். நான் காட்டு மக்களைப் பற்றிய பழக்க வழக்கங்களைப் பற்றிய செய்திகளை, சுமார் முப்பதாண்டுகளாகக் காடு, மலை, வனாந்தரங்களையெல்லாம் கடந்து பிரயாணம் செய்து, விஷயங்களைச் சேகரித்து எழுதுகிறேன்'' என்று கூறிக் கொண்டே நடந்தேன். வெகு தூரத்திலிருந்த மாட்டுக்காரப் பிள்ளைகளை வழி கேட்டுக் கொண்டே மலையடிவாரம் போய்ச் சேர்ந்தேன். இனி காட்டின் எல்லையில் கால் வைக்க வேண்டும். ஆகையால் ஆண்டவனை நினைத்து ஜபம் செய்தேன். பிறகு மெதுவாக நடந்தேன்.

'ஒற்றையடிப் பாதையில்தான் நடக்க வேண்டும், ஒரே வழிதான்' என்று கூறியதால் அந்த வழியில் நடந்து போக ஆரம்பித்தேன். சுமார் நான்கு 'மணி நேரம் நடந்தபின் எனக்குப் பின்னால் யாரோ ஆள் நடந்துவரும் அரவம் கேட்டது. என் உடல் நடுங்கி விட்டது. நிர்மானுஷ்யமான வனப் பிரதேசத்தில் இப்படி ஆளரவம் கேட்டால் என்ன நினைக்கத் தோன்றும்? உடனே அது என்ன ஓசை என்று கவனிக்க ஒரு மரத்தின் பின்னால் நின்றேன். நல்ல காலம்! நான் போகும் அந்த ஜவ்வாது மலையிலிருக்கும் ஓர் ஆதிவாசிதான் எனக்குப் பின்னால் நடந்து வந்தார். அவருடன் நானும் ஜவ்வாது மலைக்குப் போக ஆரம்பித்தேன். என் வருகையைக் கண்ட தமிழ் — மலையாளிகள் மிக்க சந்தோஷம் அடைந்தார்கள். அவர்களோடு சில நாட்கள் தங்கினேன்.

ஒரு நாள் காலையில் திடீரென்று ''ஓஹா—ஓஹா!'' என்று எல்லாரும் கத்தினார்கள். உடனே ஒவ்வொருவரும் தடியும் உலக்கையும் எடுத்துக் கொண்டு ஓட ஆரம்பித்தார்கள். என்ன சங்கதி என்றே தெரியவில்லை. எதுவாயிருந்தாலும் போய்ப் பார்த்து விடுவது என்ற தீர்மானத்தில் அவர்களுக்குப் பின்னால் நானும் என் காமிராவுடன் ஓடினேன். எல்லாரும் என்னைக் கவனிப்பதைப் பார்த்ததும் எனக்கு என்னவோ போல் ஆகி விட்டது. ஆயினும் நான் ஓடுவதை நிறுத்தவில்லை. 'ஏதாவது கொடிய வனவிலங்கு தென்பட்டு விட்டதா? அல்லது பக்கத்துக் கிராமத்துக்கும் இவர்களுக்கும் சண்டையா?' என்றெல்லாம் நினைத்து மனம் குழம்பினேன். எதுவாயிருந்தாலும் புகைப்படம் எடுக்கும் வாய்ப்பும், எழுதுவதற்கு ஏற்ற விஷயமும் கிடைக்காதா என்ற ஆர்வத்தில் மூச்சு இரைக்க ஓடினேன். ஓடும் கூட்டத்துக்கு முன்னால் ஒரு நாய் வழிகாட்டிக் கொண்டு போயிற்று. அதைப் பார்த்த பிறகுதான் 'இது சண்டை இல்லை, நாய் ஏதோ ஒருகாட்டு விலங்கைக் காட்டப் போகிறது' என்று தெரிந்தது. நாய் ஓடையின் ஓரமாகச் சென்று ஒரு குகையைப் பார்த்துக் குரைத்தது. எல்லோரும் குகையின் அருகில் ஓடிச் சென்று பார்த்தார்கள்; ஒரு மலையாளியை ஏதோ ஒன்று அவனுடைய காலைக் கவ்விக் கொண்டு உள்ளே இழுக்கிறது. ஆனால் இவனோ அதனுடன் சண்டை செய்து களைத்துப் போய்த் தன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டிருக்கிறான். ஆனால் மலையாளியின் கையில் நல்ல பலமான ஒரு நீண்ட கொம்பு இருந்ததால் அந்தக் குகைக்குக் குறுக்கே அதைக் கொடுத்துத் தன் பாதி உடலை அதில் மாட்டிக் கொண்டான். இதனால் உள்ளே இருக்கும் விலங்கு அவனை உள்ளே இழுக்க முடியாமல் தவித்தது. அந்தக் கொம்பு மட்டும் குறுக்கே சிக்கியில்லா விட்டால், அந்த மலையாளி இந்நேரம் குகைக்குள் யார் கண்ணுக்கும் தெரியாமல் மாண்டு போயிருப்பான். தாமதம் செய்யாமல் எல்லோரும் சேர்ந்து சர்வ ஜாக்கிரதையாகச் சிறிது சிறிதாக இழுத்தார்கள்; அப்போது குகைக்குள் இருக்கும் மிருகத்தின் ஒருவிதமான ஓசை கேட்டது.

சிக்கியவனின் கால் குகைக்குள் துண்டிக்காதவாறு மிகவும் மெதுவாக வெளியில் இழுக்கத் தொடங்கினார்கள். ஆனால் குகைக்குள் கவ்விக் கொண்டிருக்கும் பிராணி அவனுடைய காலை விடுவதாகக் காணோம். கடைசியில் வீட்டுக்குச் சிலர் ஓட்டமாக ஓடி மிளகாய்ப் பொடியையும், மூக்குப் பொடியையும், புகை இலைகளின் கட்டுக்களையும் கொண்டு வந்தார்கள். அப்பொருள்களை ஒரு வாளித் தண்ணீரில் கரைத்துக் குகை வாயிலில் சிக்கியிருப்பவனின் உடலிலும் துடையின் மேலும் ஊற்றினார்கள். அவன்மேல் ஊற்றிய அந்தக் காரமான தண்ணீர் அவனுடைய காலின்மூலம் வழிந்து உள்ளே ஓடியது; இப்படியே அந்தக் காரமான தண்ணீரை மாற்றி

மாற்றி ஊற்றினார்கள். ஏனென்றால், நெருப்பின் புகையால் உள்ளே இருக்கும் விலங்கை வெளியில் வரவழைக்கலாம் என்றால், குகையில் அந்த மலையாளி சிக்கிக் கொண்டிருப்பது ஒரு தடையாக இருந்தது. கடைசியில் காரமான தண்ணீரை மேலும் மேலும் ஊற்றினார்கள். கடைசியில் கொஞ்சம் கொஞ்சமாக அது காலை விட்டு விட்டது. பிறகு மலையாளியை வெளியில் இழுத்து விட்டார்கள். அவனுடைய காலின் காயத்தைக் கொண்டு, அவனைக் கவ்வியது என்ன மிருகம் என்று சொல்ல முடியவில்லை. அந்தக் குகையில் சிக்கியவன் நடுங்கிக் கொண்டிருந்தான். அவனுக்குக் கொஞ்சம் காப்பி கொடுத்தார்கள். கொஞ்சநேரம் கழித்து அவனுக்குத் தெம்பு வந்தது. அவன் மெல்லிய குரலில் பேசினான்:

''காலையில் எழுந்து நான் என் வயலுக்குச் சென்றேன். செல்வதற்கு முன் நான் குடி போதையில் இருந்தேன். ஆகையால் நான் சற்று நிதானமாக ஓடையின் பக்கம் போனபொழுது என்னுடன் நாயும் வந்தது. நாய் எனக்கு முன்னால் போய் எதையோ கண்டதைப் போல் குரைத்தது.

''ஓடையின் பக்கத்திலிருக்கும் குகைப் பாறையின் மேல் வேறொரு பாறை இருந்தது போல் தெரிந்தது. அந்தப் பாறையின் அருகில் போகும்பொழுது ஏதோ அந்தப் பாறையின் மேலிருந்து என் அருகில் விழுவதைப் போல் தோன்றியது. ஆனால் நான் திரும்பிப் பார்ப்பதற்குள் என் காலை ஏதோ ஒன்று கவ்விக் கொண்டிருப்பது தெரிந்தது. உடனே அது என் உடலை அடித்தது. ஆனால் என் நாய் அதற்கு மட்டும் இடம் கொடுக்கவில்லை. நாய் அதைச் சுற்றிச் சுற்றிக் கடிக்க ஆரம்பித்தது. ஆகையால் அது என் உடலை அடிக்கும் முயற்சியைக் கைவிட்டு விட்டுத் தன்னைக் கடிக்கும் நாயை அடிக்க ஆரம்பித்தது. அதே நேரத்தில் என்னையும் குகைக்குள் இழுத்துச் செல்ல ஆரம்பித்தது. நான் குடிபோதையில் இருந்ததால் என் கண்கள் காணும் பொருள்கள் எல்லாம் சுழல்வதைப் போல் தெரிந்தன. இனி நமக்கு ஆபத்து என்று தெரிந்ததும், உடனே என் சட்டையைக் கழற்றி நாயிடம் போட்டு, 'ஓடு, போ!' என்று குரல் கொடுத்தேன். நாய் என் சட்டையைக் கவ்விக் கொண்டு உங்களிடம் ஓடி வந்தது. நாய் ஓடியபின் மிருகம் என்னை வேகமாக இழுக்க ஆரம்பித்தது. என் கையில் இருந்த தடியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டேன்: என்னைச் சிறிது சிறிதாகக் குகைக்குள் இழுக்கும்பொழுது என் கையிலிருந்த தடியைக் குகைக்குக் குறுக்கே வைத்துக் கொண்டு, அதன் மேல் என் உடலைக் கவிழ்த்துக் கொண்டு பிடித்துக் கொண்டேன். தடி குகையின் குறுக்கே மாட்டிக் கொண்டதால் அந்த விலங்கால் என்னை இழுக்க முடியாமல் போய்விட்டது. அதற்குள் நீங்கள் வரும் ஆரவாரம் கேட்டது. எனக்குத் தைரியம் வந்தது. அப்புறம் நடந்தது உங்களுக்குத் தெரியுமே?'' என்றான்.

கடைசியில் குகையில் இருக்கும் மிருகம் என்ன என்று கண்டுபிடித்து விடுவதென்று சில வாலிபர்கள் துணிந்தார்கள். வைக்கோலையும், கட்டைகளையும் குகைக்குச் சற்றுத் தூரத்தில் போட்டுத் தீயையும், புகையையும் உண்டாக்கினார்கள். சில மணி நேரங்களுக்குப் பிறகு குகையிலிருந்து ஒரு பெரிய மிருகம் வெளியில் வந்தது. குகையை விட்டுச் சிறிது தூரம் வந்ததும் அதைத் தடியால் அடித்தவாறே ஒரு திறந்த புல்தரைக்குக் கொண்டு வந்தார்கள். உடனே அந்த மிருகத்தை நான் புகைப்படம் பிடிப்பதற்காக அருகில் சென்றேன். ஆனால் என் உருவத்தைக் கண்டதும் உடனே என்னை நோக்கி, ''விறு விறு'' என்று அது வந்தது. அதற்குள் எல்லாரும் ''ஐயா!—ஐயா!'' என்று கத்தினார்கள். ஆனால் நான் 'கிளிக்' என்று புகைப்படம் பிடித்துக் கொண்டு தூரத்தில் ஓடினேன். எவ்வளவோ அந்த மிருகத்தை அடித்தும் அது கடைசி வரையில் சாகவில்லை. கட்டை வண்டியையும் மேலே ஏற்றினார்கள். அப்பொழுதும் அது சாகவில்லை. கடைசியில் வைக்கோல் போர்களையும், காட்டு விறகுகளையும் போட்டுத் தீ வைத்துப் பொசுக்கினர். பிறகு தான் அதைக் கொல்ல முடிந்தது.

''சில மாதங்களுக்கு முன் ஒரு மாட்டுக்காரப் பையன் காணாமல் போனதற்கும், அடிக்கடி கன்றுக்குட்டிகள் மறைந்து போனதற்கும் இந்த மிருகம்தான் காரணமாக இருக்க வேண்டும். ஏனென்றால், இது நீண்ட நாட்களாக இந்தக் குகையில் வாழ்ந்து கொண்டு வருகிறது. குகைக்குப் பக்கத்தில் நீரோடையும், தன் உடலை வெய்யிலில் காய வைப்பதற்குப் பாறையும், மறைந்துகொள்வதற்குக் குகையும் இருப்பதால், இவ்வளவு நாட்களாக அது நம் கண்களில் சிக்காமல் இருந்திருக்கிறது'' என்றனர். குகையிலிருந்தது என்ன?

(68ம் பக்கம் பார்க்கவும்)



# கண்ணம்மாவின் உள்ளம்

மூன்று வருடங்களுக்குப் பிறகு இன்றுதான் பிறந்த வீட்டுக்கு வந்திருக்கிறேன். பகல் சாப்பாடு முடிந்ததும் ஆயாசத்துடன் வந்து படுத்தவள் அப்படியே உறங்கி விட்டேன். இரண்டு நாட்கள் மூன்றாம் வகுப்புப் பெட்டியில் சித்திரவதை அனுபவித்து வந்த சிரமம் அல்லவா? சோம்பல் முறித்தபடி எழுந்திருந்தேன்.

பக்கத்து வீட்டுப் 'போர்டிகோ'வில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. ஏதோ ஓர் ஆவலுடன் சன்னல் வழியாகப் பக்கத்து வீட்டுப் பக்கம் பார்வையைச் செலுத்தினேன். காரை உள்ளே விட்டு விட்டுப் போர்டிகோவைப் பூட்டி விட்டுச் சாவியுடன் பங்களாவுக்குள் நுழைந்த டிரைவர் மீது என் பார்வை சென்றது. அப்பப்பா! என்ன கோரம்! என்னை யறியாமலே என் கண்கள் மூடிக் கொண்டன. நாம் வேலைக்கு வைத்துக் கொள்கிற வேலையாட்கள்கூடப் பார்க்கக் கொஞ்சம் சுமாராகத்தான் இருக்க வேண்டியிருக்கிறது. போயும் போயும் இந்த டிரைவரை எப்படித்தான் பக்கத்து வீட்டில் வேலைக்கு வைத்துக் கொண்டிருக்கிறார்களோ! பார்க்கச் சகிக்கவில்லை. முகமெல்லாம் ஒரே அம்மை வடு. முகத்துக்குக் கொஞ்சமும் பொருந்தாத கிருதா மீசை. இத்தனைக்கும் இந்த டிரைவருக்கு வயது முப்பத்தைந்துக்கும் குறைவாகவே இருக்கும் என்று எனக்குப்பட்டது.

''என்ன பார்க்கிறாய் அங்கே?'' என்று கேட்டபடியே கையில் காப்பி டம்ளருடன் என் அருகில் வந்தாள் அம்மா.

''ஒன்றுமில்லை. கார் சத்தம் கேட்டதே என்று எட்டிப் பார்த்தேன். டிரைவராம். பார்க்கச் சகிக்கவில்லையம்மா! எப்படித்தான் அவனை அவர்கள் வேலைக்கு வைத்துக் கொண்டிருக்கிறார்களோ! குழந்தைகள் அவனைப் பார்த்தால் நிச்சயம் பயந்துகொள்ளும்.....'' என்றேன் நான் அருவருப்பான குரலில்.

''உருவம் எப்படி இருந்தால் என்ன லக்ஷ்மி. குணம் அத்தனையும் தங்கம். லட்சம் ரூபாயை வேண்டுமானாலும் கொடுத்தனுப்பலாம். அந்த நேர்மைக்காகத்தான் பக்கத்து வீட்டுக்காரர்கள் அவனை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அது மட்டுமா? நம்ப கண்ணம்மாகூட இப்போது இவனுடன்தான் இருக்கிறாள்'' என்று கூறினாள் அம்மா.

எனக்கு ஆச்சரியம் தாங்கவில்லை.

''என்ன! கண்ணம்மா இவனுடன் இருக்கிறாளா?'' என்று கேட்டேன் நம்பிக்கையற்ற குரலில்.

''ஆமாண்டியம்மா, ஆமாம்! இவனிடம் இப்போது ஒரு பெண் குழந்தையை வேறு பெற்றுக் கொண்டிருக்கிறாள். போதுமா!'' அம்மா ஏளனமாகச் சிரித்தாள். எனக்கோ எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது.

''காப்பி ஆறிப் போகிறது. சாப்பிட்டுவிட்டுக் கீழே இறங்கி வா! நான் போகிறேன். அடுப்பிலே எண்ணெய் வைத்துவிட்டு வந்திருக்கிறேன்.....'' என்று கூறிவிட்டு அம்மா கீழே இறங்கிப் போய்விட்டாள். நான் அவள் வைத்து விட்டுச் சென்ற காப்பியைக் கூடச் சாப்பிடத் தோன்றாமல் உட்கார்ந்திருந்தேன். ஆனால் என் உள்ளம்...?

எங்கள் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்த பாஞ்சாலியின் ஒரே பெண்தான் கண்ணம்மா. எனக்கும் அவளுக்கும் சம வயசு. ஐந்து வயதுச் சிறுமியாக இருந்தது முதல் அவளுக்கும் எனக்கும் பழக்கம். தன் தாயுடன் தினமும் மாலை வேளைகளில் எங்களுடைய வீட்டுக்கு வருவாள் கண்ணம்மா. நகரசபைப் பள்ளிக்கூடத்தில் அவளும் ஐந்தாவது வகுப்பு வரையில் படித்திருந்தபடியால் அவளும் நானும் ஊர் உலக விஷயமெல்லாம்

கூடப் பேசிக் கொள்வோம்: நான் எஸ். எஸ். எல். சி. பாஸ் செய்த பிறகு கண்ணம்மாவே எங்கள் வீட்டில் வேலை செய்ய ஆரம்பித்து விட்டாள்; ஏனெனில், அவளுடைய அம்மா பாஞ்சாலி நோயுற்றுப் படுக்கையில் விழுந்து விட்டாள்.

கண்ணம்மா கறுப்பாக இருந்தாலும் கண்ணுக்கு அழகாகவே இருந்தாள். வாளிப்பான உடல். எடுப்பான முகம். நீல நிறைய முடி. எப்போதுமே சிரித்தபடி இருப்பாள். எனக்கென்னவோ அவளுடைய அகன்ற விழிகளின் மீது கொள்ளை ஆசை. அவளுக்கு இருப்பது போன்ற அழகான கண்கள் மட்டும் ஒரு சினிமா நட்சத்திரத்துக்கு இருந்து விட்டால் அவளுக்குக் கண்ணழகி கண்ணம்மா என்கிற பெயர் பிரபலமாகி விடும் என்று நான் எண்ணுவது உண்டு. ஏதோ கொஞ்சம் படிப்பு வாசனை இருந்ததினாலோ என்னமோ எப்போதும் கண்ணம்மா சுத்தமாகப் பளிச்சென்று விளங்குவாள்.

வைகுண்ட ஏகாதசியன்று பிரத்தியேகமாக எங்களுடைய வீட்டுக்கு அருகில் இருந்த கல்பனா தியேட்டரில் பகல் காட்சி "சத்தியவான் – சாவித்திரி" என்று சுவரொட்டி விளம்பரங்களின் மூலம் அறிந்தேன். எனக்கு எப்போதும் சாவித்திரி கதையின்மீது அலாதி ஆசை. அம்மாவிடம் தெரிவித்தேன்.

அவள், "ஐயோ! பழைய படம்னு?" என்று முகத்தைச் சுளித்தாள்.

"பழைய படங்களில் தான் பாட்டுக்கள் நன்றாக இருக்கும் அம்மா!" என்றேன் நான் விடாப்பிடியாக.

"ஏகாதசியும் அதுவுமாக எனக்கு அங்கே யெல்லாம் வர முடியாது. உன்னை மட்டும் தனியாக அனுப்பினால் அப்பா என்னைக் கோபித்துக் கொள்வார்.." என்றாள் அம்மா அலட்சியமாக.

"வேண்டாங்கம்மா. நானும் சின்னம்மாவும் போயிட்டு வரோம்....." என்றாள் அப்போது அங்கே வந்த கண்ணம்மா.

"நீ பெரிய இழவிதான் போ!" என்றாள் அம்மா.

"இல்லீங்க அம்மா! எங்க ஆத்தாகூட வருதுங்க...." என்றாள் கண்ணம்மா.

"அப்படியானால் போய் வாருங்கள்" என்றாள் அம்மா. எனக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. கண்ணம்மாவின் பாட்டியுடன் நானும், கண்ணம்மாவும் சத்தியவான் - சாவித்திரி படம் பார்க்கக் கிளம்பிவிட்டோம்.

படம் பார்த்து விட்டுத் திரும்புகையில் நான், "பாட்டெல்லாம் எவ்வளவு நன்றாக இருக்கிறது பார்...." என்றேன் கண்ணம்மாவிடம்.

அவளோ, "அந்தச் சாவித்திரியா நடிச்சாளே, அவள் நடிப்புதான் எனக்குப் புடிச்சிருக்கு...." என்று கூறினாள்.

கண்ணம்மாவின் பாட்டி, "சத்தியவானுக்கு இன்னும் ஒரு வருஷம்தான் ஆயுசுன்னு தெரிவிச்ச பொறகும்கூட



# மகேசுவரி

அவனையே கட்டிக்கிட்டா பாரு, சாவித்திரி! அவமாதிரி யார் இருக்க முடியும்! ராஜா மகளாகப் பொறந்திருந்தும் காட்டு மேலே போய் விறகுவெட்டிப் பொழைச்சாளே! இந்தக் காலத்துப் பொண்ணுகளெல்லாம் மாமியார் வீட்டிலே கொஞ்சம் பொறுமையா வேலை செய்யப் பிடிக்காமே ஓடியாந்துடுதுங்களே" என்றாள் நீட்டி முழக்கியபடியே.

"இருந்தா அவமாதிரி இருக்கணும்" என்றாள் கண்ணம்மா.

"நீ இருப்பியா?" என்று கேட்டாள் அவள் பாட்டி.

"ஏன் இருக்காமே...?" என்று கேட்டாள் கண்ணம்மா.

"அவள்தான் பத்தினிப் பெண்" என்றேன் நான் அவர்களுடைய பேச்சில் கலந்து கொண்டதற்கு அடையாளமாக.

அதற்குப் பிறகு ஒரு வருஷத்துக்கெல்லாம் எனக்கு மணமாகி விட்டது. நான் புக்ககம் சென்று விட்டேன். கண்ணம்மாவுக்கும் அவளுடைய அத்தை மகன் அங்கமுத்து

வுக்கும் கலியாணம் நடந்து விட்டது. அவள் எங்கள் வீட்டில் வேலை செய்வதையும் நிறுத்திக் கொண்டுவிட்டாள். அவளுடைய கணவன் அங்கமுத்து பக்கத்து வீட்டில் கார் டிரைவராக வேலை பார்த்துக் கொண்டிருந்தான். கண்ணம்மாவுக்கு ஏற்றவன்தான் அவன்.

நான் ஒரு தடவை புக்ககம் சென்று விட்டு வந்தேன். அப்போது எனக்கு ஒரு பெரிய ஆச்சரியம் காத்திருந்தது. அங்கமுத்து தான் வேலை செய்கிற வீட்டில் எதையோ திருடி விட்டானாம். கையும் களவுமாக அவனை அவர்கள் பிடித்து விட்டார்களாம். ஆறு மாதம் சிறைத் தண்டனை அடைந்தான் அங்கமுத்து. ஜுரமாக வீட்டில் படுத்திருந்தவனைக் கைது செய்து கொண்டு போனார்கள் போலீஸ் அதிகாரிகள். அப்போது கண்ணம்மா ஏழு மாதக் கர்ப்பிணி. அங்கமுத்துவை விடுதலை செய்யும்படி மன்றாடினாள் அவள். சட்டத்துக்கும் இரக்கத்துக்கும்தான் காத தூரமாயிற்றே! அங்கமுத்து சிறைக்குச் செல்வதை யாராலும் தவிர்க்க முடியவில்லை.

இது நடந்து ஒரு வாரத்துக்கெல்லாம் நான் மறுபடியும் என் புக்ககத்துக்குச் சென்று விட்டேன். பிறகு மூன்று வருடங்களுக்குப் பின் இன்றுதான் வந்திருக்கிறேன். வந்தவுடன் கண்ணம்மாவைப் பற்றி அம்மா சொன்னவைகளெல்லாம் என்னால் நம்பக் கூடியவையாக இல்லை. முன்பு சத்தியவான் சாவித்திரி படம் பார்த்து விட்டுத் திரும்புகையில் கண்ணம்மா பேசிய பேச்சுக்களென்ன? இப்போது அவள் நடந்து கொண்டிருப்பதென்ன?

அங்கமுத்து என்னவானான்? கீழே இறங்கிப் போனதும் அம்மாவை நான் கேட்ட முதல் கேள்வி இதுதான்.

''அவன் சமாசாரம் ஒன்றுமே தெரியவில்லை. இவன் பெயர் என்னமோ கண்ணாயிரமாம். 'அங்கமுத்து எங்கேடி?' என்று கண்ணம்மாவையே ஒரு நாள் பார்த்துக் கேட்டேன். 'அது எங்கே போச்சோ! தெரியலிங்க!' என்று சொல்லி விட்டாள் அவள்.

**மனிதனை இழுத்த அதிசய மிருகம் இதுதான்!**



ஆனால் அங்கமுத்துவுக்குப் பிறந்த பிள்ளையும் அவனிடம்தான் இருக்கிறது'' என்றாள் அம்மா.

எனக்குக் கண்ணம்மா மீது ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. எந்த விதத்தில் இவனைக் கண்டு மனம் பறி கொடுத்தாள் இவள்? போயும் போயும் வயிற்றைக் கழுவுவதற்காகவா? எனக்குக் கண்ணம்மாவைக் கண்டு ஆத்திரம் தீரக் கேட்க வேண்டும் போல் இருந்தது. சிரமப்பட்டு அடக்கிக் கொண்டேன் மனத்தை.

ஒரு வாரத்துக்குப் பிறகு ஒரு நாள் மத்தியானம். நான் பொழுது போகாமல் வாசற் பக்கம் வந்தேன்.

இடுப்பில் ஒரு பெண் குழந்தையும், கையில் ஓர் ஆண் குழந்தையுமாக என்னை நோக்கி வந்தாள் கண்ணம்மா.

கிடைத்த சமயத்தை நழுவவிட மனமின்றி அவள் நடத்தைக்கு விளக்கம் கேட்டேன்.

''ஏம்மா, இப்படிக் கோவிச்சுக்கிறீங்க! அன்னைக்கு நான் உங்களிடமும், என் ஆத்தாளிடமும் சொல்லியபடி இப்போது நடந்து காட்டலையா?'' என்றாள் ஆற்றாமை மிகுந்த குரலில் கண்ணம்மா.

''ஆகா! நடந்துதான் காட்டுகிறாய்! நான் போன தடவை இங்கே வந்திருந்த போது உன் புருசன் கண்ணாயிரம். அடுத்த தடவை வரும் போது.....'' நான் அடுத்த வார்த்தையைக்கூட முடிக்க வில்லை. நடுவில் குறுக்கிட்டாள் அவள்.

''பேரும், உருவமும் மாறிப் போயிட்டா என் புருசனே மாறிட்டதாக ஆயிடுமாம்மா!''

''நீ என்ன சொல்கிறாய், கண்ணம்மா?'' என்றேன் ஒருவித பீதி நிறைந்த குரலுடன்.

''உங்களுடைய மனசைத் தவிர வேறு யாருக்கும் தெரியக் கூடாது. அப்படியானால் சொல்கிறேன்'' என்றாள் கண்ணம்மா.

''நான் யாரிடமும் சொல்லமாட்டேன்.''

''என் அத்தை மகன் அங்கமுத்துவே தாம்மா இந்தக் கண்ணாயிரமும். இப்பப் பெயரை மாற்றி வைச்சுக்கிட்டது. ஜெயிலிலே இருக்கிறப்போ பெரியம்மை கண்டதினாலே முகமெல்லாம் இப்படி ஒரே அம்மை வடுவா மாறிப் போச்சு. திருடி ஜெயிலுக்குப் போய்வந்தவனுக்கு யாருங்க வேலை கொடுத்து வைச்சுக்குவாங்க! அதுக்காகத்தான் இப்படித் தன் பெயரை மாற்றி வைச்சுக்கிட்டது. இப்போது யாருக்கும் அது ஜெயிலுக்குப் போன அங்கமுத்துதான்கிறது தெரியவே தெரியாதுங்க. என்னைப் பத்தித்தான் எல்லோரும் கேவலமாப் பேசுறாங்க. பேசிட்டுப் போறாங்க. மடியிலே கனமிருந்தால்தானே வழியிலே பயம்? அவருக்குத் தெரியுங்க நான் எப்படிப்பட்டவள்னு. அது போதுங்க எனக்கு. அவரு பெயர் மாறினாலும், உருவம் மாறினாலும் ஏன் அவரே மாறிப் போனாலுங்கூட நான் அவரை விட்டுப் பிரியவே மாட்டேனுங்க. சரிதானுங்களே....?'' என்று கேட்டாள் கண்ணம்மா.

**நான் வியப்பால் வாயடைத்து நின்றேன்!**

# கூந்தலின் எழிலை எடுத்துக் காட்டுகிறது

## ஸ்வஸ்திக் பர்ப்யூம்ட் காஸ்டர் ஆயில்

கூந்தலை மழமழப்பாகவும் கவர்ச்சியாகவும் ஆக்குகிறது



ஸ்வஸ்திக் ஹேர்
ஸ்டைல் 'மயூர்'

சிறிதளவு ஸ்வஸ்திக் பர்ப்யூம்ட் காஸ்டர் ஆயிலைத் தடவி, கூந்தலை வாரி மூன்று கால்களாக்கிக்கொண்டு நடுப்பாகத்தைச் சுழற்றி ஒரு பக்கமாகச் சாய்த்துக் கொண்டை போடவும். இரு பகுதிகளையும், எதிரும் புதிருமாகக் கொண்டையைச் சுற்றிச் சொருகிவிடவும். பொருத்தமான அணிகளினால் கொண்டையை அலங்கரித்துக்கொள்ளவும்.



ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய்.


சங்கரதாஸ் நகைக் கம்பெனி வைர நகைப்பெட்டியை எடுத்துக்கொண்டு மறைந்து விடவில்லை....
மனம் அடியோடு மாறிவிட்டிருக்கிறது.


போதும் இனி சமாளித்துக் கொள்ளுங்கள்! ஆனால் அவர்கள் விருப்பப்படியே நடித்துக்கொண்டிருங்கள்!


தேவகி, என் கண்ணே வா! யாரோ ஒருத்தி மூக்குக் கண்ணாடிக்காரி அத்தை என்று சொல்லிக்கொண்டு வந்தாளே!


அவன் போய்விட்டான்.
உன் மனோவியாதி நன்றாகக் குணமாகிவிட்டது, கண்ணப்பா என்கிற ராஜா! உன்னை இன்று உன் வீட்டிற்கே அனுப்பிவிடப்போகிறேன். கடைசியாக மருந்து செலுத்துகிறேன், கண்ணப்பா, கண்ணப்பா.


கண்ணப்பனை வான் வண்டியில் ஏற்றிக்கொண்டு போய் நான் சொன்ன விலாசத்தில் இறக்கிவிடுங்கள். அங்கே அம்மாள் சொல்லும் இடத்தில் படுக்க வையுங்கள். திரும்பி வரும் போது நான் சொன்னபடி செய்யுங்கள்! அது யாருக்கும் தெரியக்கூடாது.


ஒரு பழையகால வீட்டின் அறையில் ராஜா.


கண்ணப்பா! கண்ணப்பா! காப்பி ஆறிப் போகிறது. சீக்கிரம் எழுந்திரு!


கண்ணப்பா! உன்னை எத்தனை தரம் கூப்பிடுகிறது?
கண்ணப்பனா? நான் அந்த ஆளில்லை. என் பெயர்...


ராஜா என்றும் உன்னைச் செல்லமாக அழைப்பதுண்டு. உன் அப்பா அம்மா வைத்த பெயர் கண்ணப்பன் தான்.
ஓஹோ! நான் இங்கு எப்போது வந்தேன்? நீ யார்?


நானு. உன் அத்தை அஞ்சலை! உன் அப்பனோடு உடன் பிறந்தவள். அநாதையான உன்னை வளர்த்தவள். நீ ஒரு மாசமாகத் திடீரென்று காணாமல் போய்விட்டாய். நேற்று இராத்திரி வந்து படுத்துக்கொண்டிருக்கிறாய். நீ என் நன்றிகெட்ட மருமகன்...


ஓஹோஹோ, அப்படியா? என் அத்தையா நீ! நான் என்றிலிருந்து வீட்டிற்கு வரவில்லை?
நீ சங்கரதாஸ் நகைக் கடையில் வேலை செய்து கொண்டிருந்தவன். அவர்கள் ஒருவரிடம் கொடுக்கச் சொன்ன வைர நகைகளை எடுத்துக் கொண்டு ஓடிப்போய் விட்டாய்...


யாரோ கதவை
இடிக்கிறார்களே?
இப்படியா போட்டு
உடைப்பார்கள்.
வருகிறேன்.


கண்ணப்பன் வந்து
விட்டதாகச் சொல்லி
அனுப்பினீர்களே.
அதுதான் உடனே
வந்தோம்.
இவன்தான் கண்ணப்பன். என்
சொந்த மருமகன். ஆனால் யாரா
யிருந்தாலும் குற்றவாளி, குற்றவாளி
தானே? நல்ல பையன் தான்.... என்னமோ
போதாத காலம்....


நான் கண்ணப்பனுமல்ல.
இவள் என் அத்தையுமல்ல!
எல்லாம் சுத்த மோசடி...
தம்பி! இதையெல்லாம்
போலீஸ் ஸ்டேஷனில் வந்து
சொல்லு.

# 1964-65
# போனஸ் ஆண்டு!

எல்.ஐ.சியின் ஐந்தாவது மதிப்பீடு 1965 மார்ச் 31-ந் தேதி முடிய செய்யப்படும். மதிப்பீட்டுத் தேதியில், முழுக் காப்புத் தொகைக்கு (Full Sum Assured) அமுலிலிருக்கும் இலாபத்துடன்கூடிய பாலிசிகள் அனைத்தும் இலாபத்தில் பங்கு பெற உரிமையுள்ளவை ஆகும்.

1963 மார்ச் 31 தேதி முடிய செய்யப்பட்ட நான்காவது மதிப்பீடு வெளிப்படுத்திய அதிகப்படி போனசு விதங்களாவன:

| முழு ஆயுள் அஷ்யூரன்ஸ்: | என்டௌமென்ட் |
|---|---|
| ரூ. 17.50 ஆயிரத்திற்கு ஆண்டிற்கு | அஷ்யூரன்ஸ்: ரூ. 14.00 ஆயிரத்திற்கு ஆண்டிற்கு |

உங்கள் நன்மையைக் கருதி, 1965 மார்ச் 31-ந் தேதியன்று உங்கள் பாலிசி முழுக் காப்புத் தொகைக்கு அமுலிலிருக்கும்படி பார்த்துக் கொள்ளுங்கள். 1965 மார்ச் 31-ந் தேதியன்றோ அல்லது அதற்கு முன்போ இலாபத்துடன் கூடிய பாலிசி ஒன்றினை எடுப்பதும் நன்மை பயக்கும். ஏனெனில், நீங்கள் எடுக்கும் புதிய பாலிசி ஓராண்டு போனசைப் பெற உரிமை பெறும்.

**நீங்கள் இன்ஷ்யூர் செய்யும் நன்னாளே**
**நீங்கள் பாதுகாப்புப் பெறும் பொன்னாளாகும்.**

**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**



# கணித மேதை
# சுவாமிக் கண்ணுப் பிள்ளை



டாக்டர் மு. ஆரோக்கிய சுவாமி

மார்ச்சு மாதம் 4ம் தேதி நூறு ஆண்டு களுக்கு முன் பிறந்த கணிதமேதை சுவாமிக் கண்ணுப் பிள்ளை பிறந்தார். அவருடைய பிறந்த நாளின் நூற்றாண்டு விழா இம் மாதம் கொண்டாடப்படுகிறது.

சுவாமிக்கண்ணுப் பிள்ளை சென்னை அரசாங் கத்திலே உயரிய பதவிகள் வகித்து முதல் இந்தியக் கூட்டுறவு ரிஜிஸ்டிராராகவும், முதல் இந்திய விவசாய இயக்குநராகவும், தேர்ந் தெடுக்கப்பட்ட முதல் சட்டசபைத் தலைவ ராகவும் விளங்கினார். அதோடு அவர் மறக்க முடியாத கணித மேதை; வான நூல் ஆராய்ச்சியாளர்.

சுவாமிக்கண்ணுப் பிள்ளையின் வான நூல் ஆராய்ச்சி ஏழு பகுதிகளாக வெளிவந் துள்ளது. இதற்கு 'இந்தியன் எபமெரிஸ்' என்று பெயர். இதற்கு முன்னரே 1911ம் ஆண்டில் இவருடைய 'இந்தியகாலக் கணக்கு' என்ற நூல் ''இந்தியன் குரோனாலஜி'' என்ற பெயரில் வெளிவந்தது.

இந்நூல்களால் இந்திய வரலாறு பயன் பெற்றது. இந்திய காலக் கணக்குகள் பண்பு பெற்றன. வெள்ளையர் நம் நாடு வந்து சேரும் வரை நம் முன்னோர் எல்லாக் கணக்கு களையும் நட்சத்திரம், திதிப்படியே குறித்து வந்தார்கள். இவற்றைக் கொண்டு தற்கால ரீதியில் மாதம், வருடம், நாள் கண்டுபிடிப் பது அவ்வளவு சுலபமான காரியமல்ல. இதைக் கண்டுபிடிக்கக் கூடிய வல்லுநர்களைத் தேடி அடைந்தாலும் சரியாகக் கண்டுபிடிக்கப் பட்டதோ என்பதும் உறுதியல்ல. தனி மனிதர் கணக்கே இவ்வளவு கஷ்டமென்றால், அரசர்கள், போர்கள், வெற்றிகள் போன்ற வரலாற்று முக்கியம் வாய்ந்தவற்றுக்கு என்ன செய்வது? இவ்வித நிலையிலிருந்து நம்மைக் காக்க எண்ணினார் திவான்பகதூர் சுவாமிக்கண்ணுப்பிள்ளை. இதன் விளைவாக எழுந்தவையே இவ்விரண்டு நூல்களும்.

சென்னை பல்கலைக் கழகம் இவருடைய 'இந்தியன் எபமெரிஸ்' என்ற நூலின் கையெழுத்துப் பிரதியைப் பாதுகாத்து வரு கிறது; சென்னை அரசாங்கமே இதைச் சொந்தச் செலவில் வெளியிட்டுள்ளது. இதை எழுதுவதற்கு, வானத்தின் நட்சத் திரங்கள் சமயத்துக்குச் சமயம் எவ்வெவ் வாறு சஞ்சரிக்கின்றன, இந்த ஒவ்வொரு பயணத்துக்கும் எவ்வளவு காலம் வேண்டும் என்ற விவரங்கள் வேண்டும். இதற்கு உயர்ந்த வான நூல் அறிவும், கணித அறிவும் தேவை; உதாரணமாக, சந்திரன் ஒவ்வொரு மாதமும் இருபத்தியேழு நட்சத்திர வீடுகள் வழியாய்ச் சஞ்சரிக்கிறது. நாம் முப்பது நாட்கள் கொண்டது மாதம் என்று கருது கிறோம்; ஆனால் வான நூலார் இதை 27.32166 நாட்கள் என்று சரியாய்க் கணக் கிட்டிருக்கிறார்கள். ஆகவே, ஒவ்வொரு நட்சத்திர வீட்டையும் கடப்பதற்குச் சந் திரன் 27.32166 ÷ 27 : : 1.01191 நாள். அதாவது ஒரு நாளும் ஏறக்குறைய 18 நிமிடங்களும் எடுக்கிறது. இவ்விதமான கணக்குகளை வைத்துக் கொண்டுதான் நாம் திதிகளைக் கணக்கிட வேண்டும். ஒரு குறிப் பிட்ட தேதியைக் கண்டுபிடிக்க இம்மாதிரி யான கணக்குகள் எத்தனையோ செய்ய வேண் டும். 2000 ஆண்டுகளுக்குச் செய்ய வேண்டு மானால் எவ்வளவு கஷ்டமானது? மேற் குறித்த சுவாமிக்கண்ணுபிள்ளையின் இரண்டு நூல்களும் கி. மு. 1லிருந்து கி. பி. 2000 வரை கணக்கிட்டிருக்கின்றன;

'எபமெரிஸ்' என்ற இந்நூல் வரலாற் றுக்கு எத்தகைய தொண்டு புரிந்துள்ளது என்பதற்கு ஓர் உதாரணம் காட்டலாம்; சோழ மன்னர் முதலாம் குலோத்துங்கன் காலத்திலேயே பாண்டியர்கள் தங்களைப் பலப்படுத்திக் கொண்டார்கள்; அப்போது பாண்டிய நாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் ஒரு மன்னர் ஆட்சி செய்தார் போலும். இதையே சாஸனங்கள் ''பஞ்சவர் ஐவரும்'' என்று குறிக்கின்றன. வரலாற்று அறிஞர்கள் இதை ஒத்துக் கொள்ளவில்லை. ஒரே சமயத்தில் ஐந்து மன்னர்கள் ஒரு நாட்டை ஆட்சி செய்ய முடியாது என்பது அவர் களுடைய எண்ணம். சுவாமிக்கண்ணுப்பிள்ளை தான் இப்படி ஐவர் ஆண்டனர்; அவர்கள் ஒவ்வொருவருக்கும் தனித் தனி நட்சத்திரக் குறிப்புகள் சாஸனங்களில் இருக்கின்றன என் பதை எடுத்துக் காட்டினார். இன்னும் கி. பி. பதின்மூன்றும் நூற்றாண்டின் கடைசியில் இரண்டு பாண்டியர் ஒன்றாக ஆண்டிருக் கிறார்கள்; அது பாண்டிய வம்சத்தின் இறுதிக் காலம். இதையும் முதன் முதல் எடுத்துக் காட்டியவர் சுவாமிக்கண்ணுப் பிள்ளையே; இதற்குப் பிறகுதான் முஸ்லிம் வரலாற்று ஆசிரியரான வாசாப் கூறிய ''இரு சுந்தர பாண்டிகள்'' என்ற சொற்றொடருக்கு விளக் கம் ஏற்பட்டது;

''குரு பரம்பரை'', ''திருமுடி அடைவு'' போன்ற நூல்களினின்று ஆழ்வார்களின் கால நிலையை ஒருவாறு சரியாகவே கணித் துள்ளார் சுவாமிக்கண்ணுப் பிள்ளை. அதைப் பற்றித் தனியாக ஒரு சிறு நூலும், ''ஆழ்வார்களின் கால நிலை'' என்று பதிப் பித்து இலவசமாக வெளிப்படுத்தினார். இப் பெரியார் மறைந்து முப்பத்தொன்பது ஆண்டுகள் ஓடிவிட்டன. அவர் நினைவு என்றும் நம் மனத்தை விட்டு அகலாது.

# பச்சைக் கிளிப் பதக்கம்

இந்திரா பார்த்தசாரதி



லலிதாவின் கண்கள் கல்யாண அழைப்பின்மேல் பதிந்தன. ரோஜா நிறமும், மஞ்சள் நிறமும் — என்ன அழகு! அழைப்பின் வழவழப்புக்கூட அவள் தாய் உள்ளத்தில் இன்பத்தை வாரிக் கொட்டியது. ''சௌ கிரிஜாவைச் சிரஞ்சீவி கிரிதரனுக்குக் கன்னிகாதானம்....'' கிரிஜாவுக்குக் கல்யாணம். கிரிஜா அவளுடைய ஏக புதல்வி.

லலிதா அழைப்பை மடித்து ஒட்டினாள். முகவரி எழுதி உற்றார் உறவினருக்கு அனுப்பும் பணியில் ஏதோ இனிமை இருந்தது. அவசரத்தில் யாரையும் விட்டு விடக் கூடாது. உறவினர்கள்.... நண்பர்கள்.....

சட்டென்று அவளுக்குக் கோமதியின் நினைவு வந்தது. கை கோமதியின் பெயரையும் விலாசத்தையும் அழைப்பின் மேல் எழுதும்போதே மனம் ஏதோ முள் தைத்து விட்ட மாதிரியான வேதனையில் கூசியது. முள் இப்போதா தைத்தது? இன்னும் ஏன் அவள் கூச வேண்டும்?

கோமதியின் நினைவு தந்த கசப்போடு அழகியதொரு முத்துமாலையின் இனிப்பும் சேர்ந்துகொண்டது.

மூன்று வட முத்துமாலை. ஆங்காங்கே மூன்று வடங்களையும் பிணைத்தாற்போலப் பதித்த பச்சைக் கற்கள். நடுவில் பச்சையும் வைரமும் கலந்து பச்சைக்கிளியின் உருவில் அமைக்கப்பட்ட பதக்கம். அவள் பார்த்துப் பார்த்து ஆர்டர் கொடுத்த டிசைன்.

அந்த மாலை கிரிஜாவின் பொற் கழுத்தைத்தானே அலங்கரிக்க வேண்டும்! கோமதியின் கையில் சிக்கி.....

லலிதாவின் கைப் பேனா செயலிழந்து நின்றது. மனம் ஒன்றினால் தானே காலத்தில் பின்னோக்கிச் செல்ல முடிகிறது! அந்தத் தனி சக்தியில் அது இயங்க, அவள் சிலையாகிவிட்டாள்.

லலிதா கைப்பற்றிய சேகரன் குமாஸ்தா வேலைதான் பார்த்து வந்தான்: ஆனால் அப்போதெல்லாம் விலைவாசியில் ஒரு நயம் இருந்தது. குடித்தனம் நடத்துவது பிரம்மப் பிரயத்தனமாய்த் தோன்றவில்லை. லலிதாவுக்குச் சங்கீத ஞானமும் ஓரளவு இருந்தது; காலை வேளையில் அக்கம் பக்கத்துப் பெண்கள் இருவருக்குப் பாடம் கற்பித்தாள். அதன் வருவாயும், அவன் சிக்கனத்தின் பயனும், பெட்டிக்கடியில் மெள்ள மெள்ளப் பெருகும் தொகையாகச் சேர்ந்து வந்தன:

கிரிஜா பிறந்தாள். குழந்தையின் அழகைக் கண்டபோது தாயாலேயே வியக்காமலிருக்க முடியவில்லை. வெந்த நிறத்தோடு அழகிய கருவிழிகளும், சுருள்கேசமும், செவ்வாயும்: ''இந்த அழகுப் பிம்பம் என் உடலில் வளர நான் என்ன தவம் செய்தேன்!'' என்று அவள் பூரித்த நாட்கள் எத்தனை எத்தனையோ!

தொட்டிலில் உறங்கிய குழந்தை அமர்ந்தாள், நடந்தாள், ஓடலானாள்; தாயின் மனத்தில் படர்ந்த இன்பத்துக்கு எல்லைதான் ஏது? பாவாடையை உடுத்திக்கொண்டு நடனமாடி உள்ளத்தைக் கொள்ளை கொண்டாள். அருகில் ஓடி வந்து,

தாயின் கழுத்துச் சங்கிலியைத் தன் மார்பின் மேல் வைத்துக் கொண்டு, முத்து உதிர்த்தாற்போல் சிரிப்பை அள்ளி வீசினாள்.

அப்போதே லலிதா தீர்மானித்து விட்டாள், பெட்டிக்கடியில் சேர்ந்து வரும் பணத்தை எப்படிச் செலவழிக்க வேண்டும் என்று.... அழகு மகளை அலங்கரிக்க ஓர் அழகிய ஆபரணம் வேண்டும்! கற்பனை பட்சியெனப் பறந்தது. மனத் திரையில் அழகின் எத்தனையோ உருவங்கள் எழுந்து மறைந்தன. கடையில் மூன்று வருட முத்து மாலை கற்பனையில் தோன்றி, மனத்தில் பதிந்து, காரியத்தில் உருவம் கொண்டது. பெட்டிக்கடியில் நானூறு ரூபாய் சேர்ந்த போது அவள் தட்டார்க் கடையை நோக்கி விரைந்தாள்.

கனவு நனவாகியது. கிரிஜாவின் நான்காவது பிறந்த நாளின் போது பச்சைப் பாவாடை, சட்டை அணிவித்துப் புத்தம் புதிய முத்துமாலையைப் பூட்டிய போது, குழந்தை எப்படிப் பூரித்துப் போனாள்! சிறு கைகளைக் கொட்டி எப்படி ஆரவாரித்தாள்! கைகளை மாலையாக்கித் தாயின் கழுத்தை அன்போடு அணைத்ததைத்தான் மறந்துவிட முடியுமா?

வருடங்கள் மறைந்தன. "உலகில் அன்பும் இன்பமும் மறைவதில்லை" என்பது போல் முத்துமாலை கிரிஜாவின் அழகுக்கு அழகு சேர்த்தவாறு மின்னிச் சிரித்தது.

புயலடித்து அந்த மாலையைப் பறித்த போது கிரிஜாவுக்குப் பதினைந்து வயது. அதை நினைக்கும்போதே லலிதாவின் கண்கள் குளமாகி விட்டன.

சங்கரனின் உடல் ஏனோ நாளுக்கு நாள் இளைக்கலாயிற்று. எதற்கும் வைத்தியரிடம் காட்டி விடலாம் என்றுதான் போனான். அதன் பலன், ஆபீஸிலிருந்து ஓய்வெடுத்துச் சிகிச்சை பெற வேண்டியதாயிற்று. என்ன தான் ஆரம்ப நிலையில் இருந்தாலும், டி. பி. டி.பி.தானே!

கஷ்டமில்லாமல் நடந்த குடும்பம் தள்ளாடியது. குடும்பத் தலைவன் நோயாளியாகி விட்டான். அவனுக்குச் சிகிச்சை, புஷ்டியான ஆகாரம். அவளுக்கு உணவென்ற பெயரில் ஏதோ.... ஒரே குழந்தையான கிரிஜாவுக்கு உணவு, உடை வேறு. செலவு மலை போல் குவிந்தது. அப்போதும் லலிதா முகம் சுளிக்கவில்லை. பாங்கியிலிருந்த பணம் கரைந்த போதும், தன் நகைகளை விற்க வேண்டி வந்த போதும் அவள் மனம் தளரவில்லை. கண்ணுக்கெதிரே கணவன் குணமடைந்து வருகிறானே! சின்னஞ் சிறு புன்னகையொன்றிலேயே கவலைகளை மறக்கும் திவ்விய அழகோடு மகள் வளைய வருகிறாளே! ஆண்டவன் கருணை மிக்கவன் தான்!

ஆயிற்று. சங்கரனுடைய உடல் பூரண குணமடைந்து விட்டது. இனி அவன் முன் போல் வேலை செய்யலாம். இந்த நிலை ஏற்பட்ட போதுதான் டாக்டர் தம் 'பில்'லை அனுப்பி வைத்தார். முந்நூறு ரூபாய்! தளராத மனம் தளரலாயிற்று. வீட்டில் எஞ்சியிருந்த நகை, முத்து மாலை ஒன்றுதான் என்ற உணர்வு அவள் மனத்தில் கலக்கத்தைக் கொட்டியது.

விற்க முடியாது அதை. அடகு வைத்தால்? அந்த முயற்சியும் வீண் போயிற்று. "நூறு ரூபாய் தருகிறேன்!" என்று கடைக்காரன் சொன்னபோது அவள் வெருண்டு நகையோடு திரும்பினாள்.

அப்போதுதான் அவளுக்குக் கோமதியின் நினைவு வந்தது.

கோமதி அவளுக்கு ஏதோ தூரத்துப் பந்து. அதைவிட முக்கியம், கோமதி அவள் தோழி. பள்ளியில் ஒன்றாய்ப் படித்த நாட்களில் அவர்களிடையே சிநேகம் வளர்ந்து உரமேறியிருந்தது. அந்தக் கோமதி இன்று பெரிய அதிகாரியின் மனைவியாக, சொந்த வீடும், தோட்டமும், காருமாக வாழ்கிறாள். முத்துமாலையை வைத்துக் கொண்டு முந்நூறு ரூபாய் கொடுக்க மாட்டாளா என்ன? பிறகு கையில் பணம் சேரும்போது மீட்டுவிடலாம்.

கோமதியின் வீட்டில் அடியெடுத்து வைத்தாள் லலிதா. "வா, வா.... நினைவிருக்கிறதா என்ன?" என்று முகமலர்ச்சியோடு கோமதி வரவேற்றபோதுதான் வந்த காரியம் நிச்சயம் நிறைவேறப் போகிறது என்றுதான் லலிதா எண்ணினாள்.

டிபனும் காப்பியும் முடிந்த பிறகு, "என்ன விஷயம்?" என்று கேட்டாள் கோமதி.

லலிதா எல்லா விவரங்களையும் கூறி விட்டு முத்துமாலையைக் காண்பித்தாள். "இதை வைத்துக் கொண்டு எனக்கு முந்நூறு ரூபாய் கொடுத்து விடு, கோமதி..... முடிந்தபோது மீட்டு விடுகிறேன்!" என்றாள்.

கோமதி ஏன் மௌனமாயிருக்கிறாள்?

லலிதா தோழியின் முகத்தைப் பார்த்தாள். அதில் கடுமை மெள்ளப் பரவுவதைக் கண்டபோது அவள் உள் மனத்தைப் பீதி கவ்விக் கொண்டது.

"அது முடியாத காரியம், லலிதா! வேண்டுமானால் இதை என்னிடம் விற்று விடு. நீ என்ன விலை சொன்னாலும் கொடுத்து விடுகிறேன்......."

"குழந்தைக்கென்று ஆசையாய்ச் செய்தது, கோமதி, விற்கச் சொல்கிறாயே!"

"புரிகிறது.... என்ன செய்யலாம் சொல்! நான் நகையை அடகாகப் பெறுவது முடியாத காரியம். அதற்கு மேல் உன் விருப்பம்!"

பீறிட்டெழுந்த அழுகையை விழுங்கி விட்டுக் கெஞ்சினாள் லலிதா. தோழியின் நெஞ்சம் கல்தானா? அல்லது காதுகள் செவிடா? அவள் தொண்டை வலிக்க ஆரம்பித்ததுதான் மிச்சம். ஆனால் தெய்வமே அவளைச் சோதிக்கும்போது கோமதி கல் நெஞ்சோடு உதவ மறுத்ததுதானா அதிசயம்?

கடையில் நகையை விற்று விட்டு அவள் திரும்பினாள். இதயத்தின் ஒவ்வொரு மூலையிலும் வலி தெறித்தது. "கிரிஜாவின் நகையை நான் விற்று விட்டேன். ஐயோ! அன்பையும் இன்பத்தையுமே விற்று விட்டேனே!" என்று மனம் கதறியழுதது. "கோமதி ஏன் உதவ மறுத்தாள்? ஏன்... ஏன்....?" கேள்வி விசுவரூபமெடுத்து அவள் நெஞ்சின் மீதே திரும்பி மோதி அதைப் புண்ணாக்கிச் சென்றது.

அதன் பிறகு.... முன்போல் அவளால் பணத்தை மிச்சப்படுத்த முடியவில்லை. சங்கரனுக்கு மருந்து வகைகள் வாங்க வேண்டியிருந்தது. வியாதி திரும்பக் கூடாதல்லவா! விஷம் போல் ஏறும் விலைவாசியின் பிரச்னை

ஒருபுறம்...... முத்துமாலை அவள் கற்பனை களை மட்டுமே அலங்கரிக்கலாயிற்று. வாழ்க் கையில் அதற்கு இடமில்லை.....

"அம்மா! விவாகம் முடிவாயிற்று?" என்று கேட்டவாறே எதிரே வந்து நின்ற மகளின் எழில் தோற்றம், லலிதாவின் பிரமை யைக் கலைத்தது. அவள் கழுத்தில் 'பதினொரு காரெட்'டில் நெக்லஸ். அது அவள் இயற்கை அழகுக்கு எந்தவித எடுப்பாயிருக்கிறது!

மகளின் அழகைப் பேராசையோடு பருகி னள் பெற்றவள்...... 'முத்துமாலை இல்லா விட்டால் போகிறது. அதை விற்றபோது நான் வெறும் நகையைத்தான் விற்றேன். அன்பும் இன்பமும் நகையிலா இருக்கின்றன? என் மகள் என்றும் புன்னகை தவழும் முகத் தோடு இருந்தால் போதும்!' என்று எண் ணிக் கொண்டாள்.

கல்யாண தினம் வந்தது. சுபமுகூர்த்தம் சுபமாகக் கழிந்தது. மஞ்சள் கயிற்றுடன் கிரிஜா அவளை வணங்கி எழுந்த போது அவள் தாயுள்ளம் இன்பத்தில் நிறைந்தது. "ஆண்டவனே! நீ கருணை மிக்கவன்!" என்று மனம் முணுமுணுத்தது.

மத்தியானம் சாப்பாடு ஆனதும் அவள் சற்றே இளைப்பாற எண்ணிப் படுத்துக்கொண் டாள். சங்கரன், "வாசலில் தபால்காரன் காத்திருக்கிறான் பார்!" என்ற போது அவள் "ஏதாவது வாழ்த்துத் தந்தியாக இருக்கும்!" என்றுதான் எண்ணினாள்.

தபால்காரன் ஒரு சிறு பார்சலை நீட்டினான். கையெழுத்திட்டு அதைப் பெற்றுக்கொண்டு உள்ளே வந்து பிரித்தாள் லலிதா.

என்ன! கற்பனையில் தோன்றி, நினைவில் உருவாகி, பின் கனவுபோல் அவள் வாழ்வி லிருந்து மறைந்துவிட்ட முத்துமாலை!

அத்துடன் இருந்த கடிதத்தை அவசர மாகப் பிரித்துப் பார்த்தாள்.

அன்புள்ள லலிதாவுக்கு,

அன்று நீ என்னிடம் விற்ற முத்து மாலையை இன்று உனக்கே அனுப்பியிருக் கிறேன். கிரிஜாவுக்காக நீ ஆசையாய்ச் செய்த நகை, மணமகளாக அவள் திகழும் இந்தச் சுபதினத்தில் அவள் கழுத்தை அலங் கரிக்க வேண்டியதுதான் முறை.

அன்று நான் உன் விருப்பப்படி மாலையை அடகாகப் பெற ஏன் சம்மதிக்கவில்லை என்று நீ குழம்பியிருக்கலாம். அதற்குக் காரணம், 'பணத் திமிர்' இல்லை. அன்று நாம் பேசிக் கொண்டிருந்ததையெல்லாம் அடுத்த அறையி லிருந்து எங்கள் வீட்டுச் சமையற்கார அம் மாள் கேட்டுக் கொண்டிருந்தாள்! நான் நகையை உன்னிடமிருந்து அடகாகப் பெற் றிருந்தால், என் கணவருக்குத் தெரியாமல் நான் லேவாதேவி வேலை நடத்துகிறேன் என்ற பெயரை அதிவிரைவில் அக்கம்பக்கத் தில் பரவ விட்டிருப்பாள்: என் கணவர் காதில் அது பட்டு விட்டால், பிறகு அவர் என்னை மன்னிக்கவும் மாட்டார்; நேசிக்கவும் மாட்டார். அவர் அன்பை இழந்து அவர் கண்களில் தாழ்ந்த பிறகு எனக்கு வாழ்வேது? அதனால்தான் அன்று உன் நெஞ்சை உடைத் தேன், என் நெஞ்சை இரும்பாக்கிக்கொண்டு.

நகையைப் பெற்றுக் கொள்ளாமல் பண உதவி செய்தால் நீ அதைப் பெற மாட்டாய்.










என்பது உன் குணத்தை அறிந்த எனக்குத் தெரிந்த விஷயமே. இப்போதாவது என்னைப் புரிந்து கொண்டு மன்னித்துவிடு.

முத்துமாலை கிரிஜாவுக்காக நான் அளிக்கும் திருமணப் பரிசு...... உன் அன்பின் சின்னம் அது. அவள் இன்பத்தின் சின்னமாகவும் இருக்க வேண்டும் என்பது என் ஆசீர்வாதம்.

உன் பிரியமுள்ள,
கோமதி."

கையில் இருந்த முத்துமாலையைப் பார்த் தாள் லலிதா. பச்சைக்கிளிப் பதக்கம் பள பளவென்று மின்னியது. அவள் கண்களிலோ நீர் முத்துக்கள் மின்னின.

# நாட்டுப்புறத்தானின் நல்லறிவு

ஸ்ரீஹரி

அண்மையில் ஒருநாள் எங்கள் ஊரில் நடைபெற்ற ஓர் உபநயனக் கல்யாணத்துக் குச் சென்றிருந்தேன். ஐம்பது மைல் சென்ற வன் கோவிலுக்குச் சென்று ஸ்வாமி தரிசனம் செய்யாமல் திரும்பி வர மனம் இணங்குமா? கோவிலுக்குச் சென்றேன்.

வேறு சிலர் வரவை எதிர்பார்த்துக் கோபு ரத்துக்கு வெளியே சற்று ஒதுங்கினேன்.







சிறிது நேரத்தில் இரண்டு கிராமவாசிகள் அருகாமையில் ஊரில் நடந்த அமளிகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். விவாதத் தின் சுருக்கம் வருமாறு:

முதல்வர்: என்னமோ! இந்த ஊரு பட்ட பாடு என் ஆயுளிலே கண்டதில்லே. என்னத் துக்குத்தான் இந்தப் பாடும் பாடோ தெரியல்லே....

இரண்டாவது நபர்: இந்தி பேசாதவங்க இந்தி வாணாங்கறாங்க....

முதல் நபர்: சரி... கட்டுப்பட்டாப் போச்சு;

இரண்டாவது நபர்: இந்திக்காரனுங்க இங்லீசு வாணாங்கறானுங்க.

முதல் நபர்: கட்டுப்படுங்க....

இரண்டாவது நபர்: ...அப்படியானா....?

முதல் நபர்: அட இது புரியில்லையா? இந்தப் பேச்சு வர்றத்துக்கு முன்னாலே என்னய்யா இருந்திச்சு? எப்படிய்யா நடந் திச்சு? அதுலே இருந்துட்டுப் போவட்டும்.

இரண்டாவது நபர்: அது சரிதான்; சொம்மா கடக்கிற சங்கை ஊதிக் கெடுத் தானும் ஆண்டியின்னு கணக்கா இந்த வம்பு தும்புங்களே இல்லாமே போவுறாண்ட்ரேன்..

இந்தக் கிராமவாசிகளின் பேச்சைக் கேட் டுத் திகைத்தேன். அவர்களை அடுத்துச் சென்று ஒரு கேள்வி கேட்டேன்.

நான்: நமது தேசத்தில் உள்ள பல ராஜ் யங்களும் ஒன்றுபட்டு நிற்க, நமக்கென்று ஒரு தனி மொழி — பொது மொழியாக நமக்கு வேண்டாமா?

இதைக் கேட்டு இருவரும் கடகடவென்று சிரித்தார்கள். "ஐயா! ஒங்களேப் பார்த்தா படிச்சவங்கமாதிரி தோணுது. ஆனா மேலே மேலே படிச்சிக்கினே போவாத்திலே நேத்தி முந்தாநாள் படிச்சதே மறந்துபூடீங்களே!" என்றனர்.

நான்: என்னய்யா நீங்க சொல்வது...?

இரண்டாவது: ஐயா. நடந்ததைத்தான் சொல்றோம். ஒண்ணும் புதிசில்லே...

நான்: என்ன நடந்தது?....

முதல் நபர்: அதுதான்... மலையாளம், தமிழ், தெலுங்கு, கன்னடம், துளுக்கு அப் படி இப்படின்னு என்னென்னமோ பாஷைங் களே பெல்லாம் பேசிக்கினு இருந்த ராஜா வுங்க, மகாராஜாவுங்க, நவாபுங்க, கல்தா ஜுங்க, அவுங்க இவுங்களே யெல்லாம் எப்படி ஐயா படேல் மந்திரி ஒண்ணு சேர்த்து ஒரே இந்தியாவாச் செய்ஞ்சாரு? அதைச் செய்ய ஒதவின ஒரு மொழி—தனி மொழி — பொது மொழி இப்போ என்னய்யா ஊரே வுட்டு ஓடியாப் பூடிச்சு? சொல்லுங்க....

இரண்டாவது நபர்: ஆமாண்ட்ரேன். வெள்ளையத்த ஆண்டிகளுக்கு வேலே வாணுமா? சொம்மா கெடக்கிற சங்கே ஊதரானுவ. எய்த்திரு, ஊட்டைப் பார்க்கப் போவலாம்.

ஃ ஃ ஃ

நான் பிரமித்து நின்றேன். இதற்குள் மற்ற உறவினரும் வந்தனர். "பிரபோ! ராமச்சந்திரா! என்ன இந்த நாட்டுப்புறத் தானின் அரசியல் அறிவு!" என்று வியந்த படியே கோவிலுக்குள் நுழைந்தேன்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press. Kilpauk Madras-10
Managing Editor: T. Sadasivam.

